வெளியீடு எண் 112

# திருவாதவூரர் - - சிவபோதவாழ்க்கை



திருவாவடுதுறை ஆதீனம்

உ

சிவமயம்

சித்தாந்தசைவ

# ஆறுவது மாநாட்டு மலர்

திருவெண்ணெய்நல்லூர்

ஏவிளம்பி – புரட்டாசி – ௰௭


திருவாவடுதுறை ஆதீனம்

3—10—1957

*வெளியீடு எண்: 112.*

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருவாதவூரர் சிவபோத வாழ்க்கை

இஃது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி

ஆதீன வித்துவான்
தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன்
இயற்றியது.

திருவாவடுதுறை ஆதீனம்
1957



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம்

—சிவஞானயோகிகள்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகள் துதி

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை உயிர்க்கொலை செயாமை
அருள்பொறி அடக்கல் பொறைதவம் வாய்மை
அன்பறி வென்னுமெண் மலர்கொண்(டு)
ஒருமையொ டருச்சித் திடுகஎன் றடியார்க்(கு)
ஒள்ளிய தீக்கைசெய் துணர்த்தத்
திருவமர் துறைசை உறையருள் குருவாம்
திருநமச்சிவாயர்தாள் போற்றி.

—சிவஞானயோகிகள்.

இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் துதி

இப்புவியோர் என்றென்றும் சிவஞானம் எய்திடவே
ஒப்பில்லா நகிலம்மை உடனுறையும் சிவனெந்தை
திப்பியநல் குருவாகித் திகழ்ந்தருள்செய் துறைசையின்
சுப்பிரமா மணியவர்தம் பொற்சரணம் சுமப்போமே.

—தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.



ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக மூர்த்திகளை
இருபத்தொன்ருவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-லஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகள் வழிபடுதல்

உ
சிவமயம்

# நன்றியுரை

பாசியுட் பதிந்திடு பசுங்கதிர் முத்தம்
சோதியிற் சொலித்தல் ஆங்கிலை ஆயினும்
வாதியன் வந்திங் கதுதனை வாரிடின்
சோதியே வீசிடச் சுடர்ந்து பொலியுமே.

—தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.

உடல்கொள் உயிராய்வாழும் நாம், உடல் எடுத்தல் அறப்பெற்று அரன்கழல் அடைவதே ஆனந்தப்பேறு ஆகும். இதனின் சிறந்த பேறு வேறு இலது. இதற்கான வழிமுறைகளை விவரமாக விளக்குவனவே சித்தாந்த சாத்திரங்கள். இவை கூறுகின்ற நெறிகளே சரியை முதலான உண்மைத் தவ நெறியாகும். இந்த நான்கு சன்மார்க்கங்களுள் நான்காவது ஞானநெறி எனப்படும். இஃது அநுபவ நெறியாகச் சற்குருவின் திருவருளால் வாய்ப்புறும். இத்தகைய ஞான அநுபவநெறியையே சிறப்பாகச் சன்மார்க்கம் என்பர். இம்மார்க்கம் எத்தகை அருமைப்பாடு கொண்டது என்பதை ஸ்ரீ மாணிக்க வாசகசுவாமிகள் வரலாறு உணர்த்துகிறதென்பர். எனவே, நாம் இந்த உயர்ந்த நெறியினைச் சாத்திரங் களாலும், திருவாதவூரரின் திவ்விய சரிதைப்

போக்கினாலும் ஐயமற உணரலாகும். அங்ஙனம் உணரப்பெற்று அந்நெறி மேற்கொள்வோரை ஆட் கொள்ளக் கருதியே சிவஞானசற்குருபரம்பரையினை இந்தஉலகிலே பரமேசுவரன் நிருமித்தருளியுள்ளார். இத்தகைய தெய்வத்திருவருள் நிலையமே நமது திருவாவடுதுறை ஆதீனம் ஆகும்.

இவ்வாதீனத்தே ஞானசாத்திரப் பனுவல்கள் யாவும் உள்ளன; ஞானாசாரிய பரம்பரையும் எழுந் தருளி விளங்கியுள்ளது. இந்த ஆதீனத்திருவருள் எல்லையுள் காட்சிதந்து திகழ்வதே ஆளுடையார் கோயில் என்னும் அரிய நிலையம். இதனில் ஞான மார்க்க அநுஷ்டித சைவசமயாசாரியராகிய நம் ஸ்ரீ மணிவாசகப்பெருமான் திருவீற்றிருந்து நம்மனோரை உய்யக்கொண்டருளுகின்றார் ஆவர். ஆகவே நாம் உய்திபெறுதற்பொருட்டு முயல்வதாயின், திருவாத வூரரின் திவ்விய சரிதையினையும், அப்பெருமான் எங்ஙனம் சிவபோதச்செந்நெறியே பற்றியொழுகிச் சிவசாயுச்சியப்பேற்றினை அடைந்து, நம்மனோரைத் தெளிவித்தருளியுள்ளார் என்பதையும் தெரிதல் நன்றாகும்.

இங்ஙனம் உலகம் அறியப்பெற்று உய்ய வேண்டுமென்றபெருங்கருணைகொண்டருளியவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்தே இதுபோழ்து எழுந் தருளியுள்ள 21-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள்.

இவர்கள் திருவருளாணைப்படியே இந்த நூலாகிய "திருவாதவூரர் சிவபோத வாழ்க்கை" என்பது நிகழும் ஏவிளம்பி ஆண்டு புரட்டாசித் திங்கள் விஜயதசமி நல்நாளில் திருவெண்ணெய்நல்லூரில் நடைபெறும் சித்தாந்த சைவ மாநாட்டு மலராக வெளியிடப்பெறுகின்றது. ஞானமார்க்கமொன்றும் அடியேன் அறியேன் எனினும், ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளின் திருவருளும், ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் நல்லாசியும் துணைநின்று அடியேனை இந்நூல் ஆக்குமாறு உதவின என்றல் மிகையன்று.

இந்த நூலைத் தமது ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகத்தே அச்சிட்டு இலவசமாக வழங்கியருளும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவடியினை அடியேன் நன்றியுணர்வுடன் இறைஞ்சுகின்றேன். இதனில் காணப்படும் குறைபாடுகளை அடியேனது அவமதிவிளைவெனக்கொண்டு உலகம் பொறுத்தருள வேண்டுகிறேன்.

அடியேனை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவடிக்கு ஆளாக்கியும், அடியேன் இதுகாறும் திருவருளாணைவழி நின்று ஆக்கிவரும் நூல்களையெல்லாம் உடனிருந்து நோக்கியும், ஊக்கியும் உதவிவருபவர் இவ்வாதீனத்து அடியவர் வித்துவான் திரு. *T. S.* தியாகராஜதேசிகர் அவர்கள் ஆவர். இந்நூலினையும் உலகுக்கு அவர்கள் தமது அணிந்துரை

தந்து அறிமுகம் செய்துவைக்கும் பேருதவிக்கு யான் பெரிதும் கடப்பாடுடையேன். இவர்தம் கெழுதகை அன்பு என்றும் நிலவுவதாக!

மற்றும், இந்நூலுக்கு உரிய உழைப்பினை உதவிய யாவர்க்கும் எனது பணிவு உரியதாகுக!

ஞானநூல்களும் ஞானநெறியும் உலகுக்கு ஒளிகாட்டி நடத்திடுக! வாழ்க உலகெலாம்.

இங்ஙனம்,
நூலாசிரியன்,
திருவாவடுதுறை ஆதீனப் புலவன்
**தே. ஆ. ஸ்ரீநிவாஸன்.**

21/G துக்காராம்தெரு,
கடலூர் N. T.
ஏவிளம்பி - புரட்டாசி.

உ

சிவமயம்

# அணிந்துரை

இருளினை நேரொப்பில் இன்னருட் சத்தி
குருவென வந்து குணமலம் நீக்கித்
தருமான ஞானத்தால் தன்செயல் அற்றுத்
திரிமலம் நீங்கச் சிவமாதல் சித்தமே.

—திருமந்திரம்.

உயிர்களாகிய நாம் உலகில் வாழ்ந்து வருகிறோம். இங்கு நாம் நிலைத்து வாழ்கின்றோம் இல்லை. இதனால் உலகம் நிலைத்த வாழ்வை நமக்குத் தருவதன்று என்பது தெளிவு. இந்த நிலையற்ற வாழ்வு துன்பமானது. நிலையுற்றவாழ்வே இன்பமயமானது. இந்த நிலையான பேரின்ப வாழ்வினை நமக்கு எடுத்துரைப்பனவே சமய சாத்திரங்கள். சமயங்களும் சாத்திரங்களும் பலப்பல. சமயங்களுள் சிறந்தது தொன்மைச் சமயமாகிய சித்தாந்த சைவம். சாத்திரங்களுள் சிறந்தது மெய்கண்ட சாத்திரமாகும். இச்சாத்திரநூல் நேரே வீட்டு நெறிக்கு வழிகாட்டுவது. வீட்டு நெறிக்கு உரிய வழிகளை நமக்கு ஒழுகிக்காட்டி விளக்கவந்தவர்களே சமயாசாரியர்கள். ஒழுகிக்காட்டுவதோடு உபதேசித்து ஆட்கொள்ளுபவர்களே ஞானசாரியர்கள். அத்தகைய விழுப்பம் அமைந்த ஞானசாரியபீடமாக விளங்குமிடமே துறைசை ஸ்ரீபஞ்சாக்கரதேசிக மூர்த்தியின் ஆதீனம்.

ஸ்ரீ பஞ்சாக்கரநெறியிலே தம் வாழ்வினைச் செலுத்தியும் ஸ்ரீ பஞ்சாக்கரமந்திரத்தால் தம்நூலைத் தொடங்கியும் சிவ சாயுச்சியப்பேற்றினை எய்தியருளியவர்கள் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளாவார். இவர்களுடைய வாழ்க்கைநெறி, நமக்குக் கடலில் செல்லும் கலத்திற்குக் கரைகாட்டும் விளக்கினைப் போன்றது. இதனை நாம் உணர்வது இன்றியமையாதது. வாதவூரரின் வாழ்க்கை சிவஞானபோத சாத்திரநெறியிலே அமைவுற்ற பெருமையுடையது. இச்சாத்திரமும் வாதவூரரின் வாழ்வும் முறையே இலக்கணமும் இலக்கியமும்போல அமைந் துள்ளன. இவ்விரண்டையும் நாம் ஒருங்குணர்ந்து ஒழுகி உய்திபெறல்வேண்டி, உயர்ந்த ஞானப்பனுவல்களையெல்லாம் திருவாவடுதுறை ஆதீனம் தொன்றுதொட்டே உலகிற்கு வழங்கி வருகின்றது. இத்தகைய சிறப்புடைய சிவஞான போதநெறி காட்டும் திருக்கயிலாய பரம்பரைத் திருவா வடுதுறை ஆதீனத்து ஞானபீடத்தில் அமர்ந்து ஞான அருட் செங்கோல் நடாத்தியருளும் 21-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் சிவஞானதான வள்ளலாகத்திகழ்வது உலகறிந்த செய்தியாம். இத்தகைய ஞானதானத்தினை உபதேசம், அறப் பணிகள், ஞானசாத்திர நூல்வெளியீடுகள், சாத்திரதோத்திர மாநாடுகள் முதலிய சித்தாந்த சைவச் செந்நெறிகளால் நாளும் வழங்கியருளும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர் களின் பரமகருணைத்திறம் போற்றற்குரியது.

இத்தகைய ஞானதானச் செயல்களில் ஒன்றே, இந்த ஆண்டு புரட்டாசித்திங்கள் விஜயதசமி நன்னாளில் நடை பெறும் திருவெண்ணெய்நல்லூர் சித்தாந்த சைவமாநாட்டின் மலராகத் "திருவாதவூரர் சிவபோத வாழ்க்கை" என்னும் ஓர் அரியநூலினை வெளியிட்டருளுதலாம்.

திருவாதவூரர்சிவபோதவாழ்க்கை என்னும் இந்நூலினை எழுதியவர்கள் ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக மூர்த்தியின் திருவருளாலும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் கருணை நோக்காலும் சைவசித்தாந்தசாத்திர வித்தகராகித் துறைசை ஆதீன வித்துவானாகவும் விளங்குகின்ற உயர்திரு. தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள். இவர்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாணைவழிநின்று திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், உண்மைவிளக்கம், கொடிக்கவி, உண்மைநெறிவிளக்கம், திருவருட்பயன் முதலிய ஞான சாத்திர நூல்களுக்கு விளக்கவுரை எழுதி உதவிய உத்தமர் ஆவர். இவர்கள் எழுதியுள்ள 'திருவாதவூரர் சிவபோத வாழ்க்கை' என்னும் அரிய ஞானநூல் சிவபோதப்பகுதி, வாழ்க்கைப்பகுதி, சிவபோத வாழ்க்கைப்பகுதி என்ற முப்பெரும் பிரிவுகளை உடையது. முதற் பகுதியாகிய சிவ போதப்பகுதியில் சிவபோதம் என்னும் ஞானநன்னெறியின் இயல்புகளும், அச்சிவஞானத்தை அடைதற்கு எல்லாச் சமய நெறிகளும் படிகளாகவும் வழிகளாகவும் அமைந்துள்ளன என்பதும், சித்தாந்த சைவத்தின் உயர்வும், பதி பசு பாச முப்பொருள் விளக்கமும், நால்வேத நெறிகளும் சித்தாந்த சைவச் செந்நெறியோடு இயைந்திருக்கும் பண்பும், உபாயம் உண்மை ஆகிய இருவகைத் தவநெறிகளும், கேட்டலாதி ஞானமுறைகளும் ஸ்ரீ மெய்கண்டார் அருளிய சிவஞானபோத சாத்திரம் உணர்த்தும் நெறியிலே விளக்கப்பட்டுள்ளன. இவ் விளக்கங்கள் திருவாதவூரர் அருளிச்செய்துள்ள திருவாசக நூலில் எங்ஙனம் அமைந்து காணப்படுகின்றன என்பதும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இரண்டாவதாகிய வாழ்க்கைப் பகுதியில் ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகளின் வாழ்க்கைவரலாறு தொகுத்துரைக்கப்பட்டுள்ளது. இதனில் திருவாதவூரரின் வரலாறுபற்றிய பல்வேறு ஆராய்ச்சியாளர் கருத்துக்களும்

காணப்படுகின்றன. சிறப்பாக வாதவூரரின் காலம்பற்றிய பல அறிஞர்களின் கருத்துக்களையும் தொகுத்து இருபிரிவுக்குள் அடக்கி, தேவார ஆசிரியர்களாகிய மூவர் காலத்திற்கும் முற்பட்டதுதான் வாதவூர்அடிகளின் காலம் என்ற இந்நூலாசிரியரின் முடிவு யாவரும் ஏற்றுக்கொள்ளத்தக்கதே. திருவாதவூரர் திருவாவடுதுறையில் சூக்கும ஐந்தெழுத்து உபதேசம் பெற்ற அரியசெய்தி பிறவரலாற்றுநூல்களில் காணப்பெருத போற்றற்குரிய புதிய உண்மைப் புலப்பாடேயாகும். இதனை எடுத்துக்காட்டும் இந்நூலாசிரியரின் ஆராய்ச்சிநுண்ணறிவுத் திறன் பாராட்டற்கு உரியது. கோகழி என்பது திருவாவடுதுறையைக் குறிக்கும் என்ற கருத்தும் அறிஞர்களுக்கு உடன்பாடாகும். இச்செய்திகளை எல்லாம் அகச்சான்றுகளுடன் ஆசிரியர் விளக்கியுள்ளார்கள். படித்து இன்புறத்தக்கன. இப்பகுதி பாடசாலைகளில் பாடமாக வைக்கத்தகும் பெற்றியுமுடையது.

இந்நூலின் மூன்றும்பகுதியாகிய சிவபோதவாழ்க்கைப் பகுதி அறிவுக்கு விருந்தாம். இதனில் வாதவூரர் வாழ்க்கை மெய்கண்ட சாத்திரம் புகலுகிற ஞானமார்க்க வாழ்க்கையாகவே - சிவபோத வாழ்க்கையாகவே அமையப்பெற்றிருத்தலைச் சான்றுடன் விளக்கிச் செல்லும் இந்நூலாசிரியரின் நுண்மாண்நுழைபுலம் போற்றற்கு உரியதே. வாதவூரரின் சிவபோத வாழ்வும் அவர் அருளிய திருவாசகமும் திருக்கோவையாரும் சிவஞான போதத்திற்கு இலக்கியம்போன்று திகழ்வன என அறியலாம். திருவாசகத்தின் நான்கு நெடும்பாக்களும் நால்வேதசாரம் என ஆசிரியர் தெளிவுறுத்துகின்றார். சிவஞானபோத சூத்திரங்கள் புலப்படுத்தும் நெறியிலேயே ஏனைய திருவாசகப் பாடல்களும் திருக்கோவையார்ப் பாடல்களும் அமைந்துவிளங்குவன என்னும் நுட்பத்தை நாம்

உணரும்படிச் செய்யும் நூலாசிரியரின் பேரறிவுத்திறம் புகழற்பாலது. திருவாவடுதுறையில் (கோகழியில்) திருவாதவூரர் சூக்கும ஐந்தெழுத்து உபதேசம்பெற்ற செய்தியைக் குறிக்குமிடத்து ஐந்தெழுத்து அருமறையின் உண்மைகள் சில அறிவிக்கப்பட்டுள்ளன. அவற்றை உள்ளத்தில் அமைத்து உய்தி பெறுவோமாக.

இங்ஙனம் பல்வகைச் சிறப்புக்களுடன் மிளிருகின்ற இந்நூலின் முதற்பிரிவில் சிவபோதவாழ்க்கை எத்தகையது என்பதை உணர்த்தியும், இரண்டாம் பிரிவில் திருவாதவூரரின் வரலாற்றை விளம்பியும், மூன்றும் பிரிவில் நம் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் சிவபோத வாழ்க்கையில் நின்றருளிய திறத்தினை ஆராய்ந்து அறிவுறுத்தியும் இந்நூலினை இனிது முடித்திருப்பது சான்றோர்களால் புகழ்ந்து பாராட்டப் படத் தக்கதாகும்.

இங்ஙனம் மெய்கண்ட ஞானசாத்திரங்களை ஓதுவித்தலாலும், நிறுத்துவித்தலாலும் நம்மை ஈடேறச் செய்தற்பொருட்டே ஸ்ரீ மெய்கண்ட சிவம் முதலான ஞானகுரு சந்தானம் இவ்வுலகிலே - நம் தண்டமிழ் நாட்டிலே - திருவாவடுதுறைத் திருமடத்திலே நிலவிவருகின்றது என்னலாம். இத்தகைய சிறந்த திருமடத்தின் ஞானசாத்திரக் கருவூலத்திலிருந்து சைவசித்தாந்த ஞானநூல்கள் பலவற்றையும் தமது ஆதீனப் புலவர்களைக்கொண்டே ஆராய்ந்து விளக்கவுரைகளுடன் தெளிவாக அச்சிட்டு இலவசமாக உலகிற்கு வழங்கியருளும் பெருமை இந்த இருபதாம் நூற்றாண்டில், துறைசை ஆதீன ஞானபீடத்தில் தற்போது வீற்றிருந்தருளும் 21 ஆவது ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கே உரித்தாகும். சைவ நன்மக்களாகிய நாம் நாளும் ஞானநூல்களை ஓதியும்

ஞானசாரியரை அடுத்து வழிபட்டும் சிவபோதம் எய்தப் பெற்று வாழ்வோமாக.

வாழ்க துறைசை ஆதீனம்!

வளர்க சித்தாந்த சைவச்செந்நெறி!

திருவாவடுதுறைவாழ் குருநமச்சிவாயதேவன் திருமரபு நீடூழி வாழ்க!

இங்ஙனம்,

திருவாவடுதுறை ஆதீன அடியவன்
வித்துவான்,
**T. S. தியாகராஜ தேசிகன்.**

கடலூர் N. T.
30—9—1957.

உ

சிவமயம்

# திருவாதவூரர் சிவபோதவாழ்க்கை

"போற்றி மாணிக்க வாசகன் பொற்சரண்"

## முதல் அத்தியாயம்

## சிவபோதப்பகுதி

### தொடக்கவுரை - வாழ்வின் குறிக்கோள்:

உலகம் பலகோடி உயிர்வருக்கங்களைத் தாங்கித் தாய்போலத் தண்ணளி செய்து வருகின்றது. இதனாலேயே, நிலமகளைத் தாய் எனவும் கற்பித்துக் கூறுவர். செல்வந்தர்கள் வீட்டில் குழந்தைகளைத் தாங்கி வளர்க்கும் செவிலித்தாய் இருப்பதைப் போலவே, இந்த மாநிலத்தாய் எல்லா உயிர்களுக்கும் உதவிபுரிந்து வருகின்றனள் என்னலாம். செவிலித் தாய், குழந்தையிடம் எவ்வளவு பரிவுபூண்டிருந்தாலும், பெற்றெடுத்த தாய் ஆகமாட்டாள். ஈன்ற தாய்க்கே, தன் குழந்தைகளிடம் அலாதியான அன்பு உண்டு. அவ்வாறே, உலகம் எனப்படும் செவிலியால் வளர்க்கப்படும் உயிர் வருக்கங்களாகிய குழந்தைகட்கு அருள் புரியும் அன்னை உண்டு என உணரப்படும். இந்த அன்னையை நாம் திருவருட் சத்தி என்று தெரிந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம். எந்த அன்னையும் தன் குழந்தைக்குத் தான் செய்யக் கருதுமவைகளை எல்லாம் அக்குழந்தையின் தந்தையிடமிருந்தே செய்விக்கின்றாள். இந்த முறையிலேயே,

திருவருட் சத்தி என்று கூறப்படும் நம் சொந்தத் தாயானவள், தன் கணவரிடமாகவே இருந்து எல்லா நலங்களையும் நமக்குச் செய்துவருகின்றாள் ஆவள். இங்ஙனம், தாயுரைகொண்டு நமக்கு உதவிவரும் தந்தையை முதல்வன் என்கின்றோம். இதனால், நமக்குத் திருவருட் சத்தியும் முதல்வனும் உற்ற பெற்றோர் எனவும், உலகம் செவிலி ஒப்பது எனவும் தெரிந்து கொள்ளலாம். இத்தகைய அம்மையும் அப்பரும் இன்றி நாம் ஈடேற இயலாது.

நம் கண் எதிரே நமக்கு அம்மையும் அப்பனும் காணப்படுவதுபோலவே, நம் கண்ணிற் படாத நிலைமையில் இருந்துகொண்டு உண்மையான அம்மையும் அப்பரும் நமக்கு ஆவன எல்லாம் ஆற்றிவருகின்றனர். இதனையே, திருக்களிற்றுப்படியார் என்னும் சாத்திர நூல், "அம்மையப்பரே உலகுக்கு அம்மை அப்பர் என்றறிக" என்றும், "அம்மையப்பர் எல்லா உலகுக்கும் அப்புறத்தார்" என்றும், "இப்புறத்தும் அவர் அல்லார்போல் நிற்பர்" என்றும் கூறுவதனால் நாம் உணரலாம். இதுவரை கூறியவதனால், ஒரு குழந்தை தந்தை, தாய், செவிலி இவர்களால் வளர்வது போலவே, நாம் சிவம், சத்தி, மாயை என்னுமிவர்களின் கண்காணிப்பால் வளர்ந்து வருகின்றோம் என்று தெரிந்துகொள்ளலாம்.

உடம்பினை வளர்க்கும அளவுக்கே செவிலியின் துணை நிகழும். அறிவு இன்பங்களை நிறைவுறுத்துவது பெற்றோரின் துணையால் நிகழ்வதாகும். அறிவு இன்பங்களின் வளர்ச்சிக்காகவே உடம்பின் வளர்ச்சி நடைபெறுகின்றது. அறிவின் வளர்ச்சியளவுக்கே

இன்பத்தின் நிறைவளவு இருக்கும். இதனால், நாம் உடம்பின் வளர்ச்சியை ஓரளவு துணைபுரிவதெனக் கொண்டு, அதன்பால் வேண்டுமளவுக்கு உரிய கடமை ஆற்றிக்கொண்டு, அறிவு நிறைவுக்கும் அதன் அளவினதாகும் இன்ப நிறைவுக்கும் எல்லாக் கடமையும் ஆற்றல் வேண்டும் எனத் தெரிதல் தக்கதாகும். மேலும், இன்பத்துக்கு அறிவு கருவியாயிருத்தலால், அந்த அறிவுவளர்ச்சிக்கே அல்லும் பகலும் அயராது நாம் பாடுபடவேண்டியுள்ளது. "நல்லறிவு நாளும் தலைப்படுவர்" என்று இச் செய்தியை நீதிநூல் அறிவிக்கும்.

பெற்ற தாயை மகிழச்செய்வதே மக்கள் கடமையாகும். மக்கள் அறிவு அடைய அடைய அன்னையர் மனம் களிதுளும்பப்பெறும். இதனால், நற்றாயை மகிழ்வுறுத்தவல்லது மக்களாவாருடைய நல்லறிவே என்பது காணலாம். இதுபற்றியே, "பிறப்போரன்ன உடன்வயிற் றுள்ளும் - சிறப்பின்பாலால் தாயும் மனம் திரியும்" என்றது புறநானூறு. "ஈன்ற பொழுதில் பெரிது உவக்கும்" என்ற வள்ளுவர்வாக்கும் இதனை வலியுறுத்தவல்லதாம். எனவே, நல்லொழுக்கத்துக்கு உள்ளீடான நல்லறிவை நாம் அடையப்பெறுதலினாலே, நற்றாயின் உள்ளம் கனிவு கொள்ளும்படி செய்ய வல்லவராவோம் என்பது தெற்றெனப் புலப்படும். இவ்வாறே, நாம் ஞானம் அடைய அடைய நம்முடைய நற்றாயாகிய திருவருட்சத்தியின் கனிவை (மகிழ்வை) அடையப்பெறுவோம் என்பது துணிபாம். இதுகாறும் கூறியதனால், நாம், தனு கரண முதலியவற்றிற்கான புசிப்பையே மிகப்பெரிதென மதித்திடாமல், ஆன்மாவினுடைய குற்றத்தின் நசிப்பையே

பெருநோக்கமாகக்கொண்டு, அந்நசிப்பிணை ஆக்கவல்ல தான ஞானத்தையே அடைய வேண்டும் என்று உண ரலாம். ஞானமே உண்மை இன்பத்துக்கு ஏதுவாகும். தண்ணீரே தாகத்தைத் தணிக்கும்; பிற பானங்கள் அங்ஙனம் தணிக்கமாட்டா. அப்படித்தான் முத்திக்கு ஞானம் தேவைப்படுகிறது. ஞானம் என்ற மாத்திரத் தில் சாதாரண அறிவுடைமையை நினைத்துவிடக் கூடாது. இவ்வகை அறிவுடைமை உண்மை ஞானம் எனப்படாது. ஆகவே, ஞானம் எனப்படுவது, 'எதை அறிவதால் ஒருவனுடைய அறிவு பூர்த்தி யாகிவிடுகிறதோ அதை அறிவதுதான்' என்று நாம் இங்குத் தெரிந்துகொள்ளுதல் நல்லது.

ஒரு தாய்க்குத் தன் மகன், தன்னுடைய கணவ னின் அல்லது அம்மகனுடைய தந்தையின் அறி வினை அடைவதைக் கண்டபோதுதான் மகிழ்ச்சி ஏற்படும். "தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து - மன்னுயிர்க்கெல்லாம் இனிது" என்ற பொய்யாமொழியும் இக்கருத்தினுக்குத் துணைபுரியும். இங்ஙனம், தாய் அடையும் மகிழ்ச்சியே தந்தையை யும் மகிழச் செய்கின்றது. இதனால், மைந்தனுக்கு அவர்கள் இன்பம் எல்லாம் ஆக்கிவைக்கின்றனர். மகனும் இன்பாநுபவம் அடையப்பெறுகிறான். இந்த வழியினை விட்டு வேறு எந்தவழியாலும் மகன், நல்ல இன்ப அநுபவத்தை அடைய இயலாது.

இவ்வாறே, தந்தையாகிய முழுமுதல்வனருளிய ஞானத்தையே நாம் பெறுவோமாயின், திருவருட் கனிவு மிகுகிறது. இதன் பயனாக ஆனந்தம் எனப் படும் பேறு நமக்கு அளிக்கப்படுகிறது என்று நாம்

தெரிவது அமையும். இதுவரையில் கூறியிருப்பது கொண்டு, ஒரு மகன், செவிலியால் உடலளவுக்கு வளர்ப்படைந்து - தன் நல்லறிவால் நற்றாயின் முழுக் கனிவை அடைந்து - தந்தையால் இன்பம் உறுவது போலவே, சிறிது துணைபுரியும் மாயையின் உதவியால் வளர்ந்து - அருட்சத்தியின் திருவருளுக்கு இலக்காகி - சிவத்தியல்பால் சிவானந்தப்பேறு எய்துவதே நம் வாழ்வின் குறிக்கோள் என்று ஐயமற நாம் தெரிதல் தக்கதாம். இவ்வாறான உடல்துணை - திருவருள் எனப்படும் ஞானமுதிர்வு - சிவானந்தப்பேறு என்னும் இம்மூன்றினுள்ளும் இன்றியமையாத குறிக்கோள் ஞானப்பேறு ஆகும். இது அறம் பொருள் இன்பங்களுள் பொருள் போல்வது. மனம் மொழி மெய் அடக்கங்களுள் இடையதாகிய நா அடக்கம் போன்ற இன்றியமையாமை உடையது. இவற்றால், சிவானந்தப்பேறே நமது முடிந்த குறிக்கோள் ஆயினும், அதனை அடையச்செய்கிற இன்றியமையாத லக்ஷியம் ஞானப்பேறுதான் என்று நாம் துணியலாம். இதனால், நாம் எவரும் ஞானமடைவதற்கே முயல வேண்டும் என்பது கருத்தாகக் கொள்க!

தூலமாக நோக்கினால், மாணிக்கவாசகசுவாமிகள் வாழ்வும் மேலே கூறப்பட்ட முறைகளையே இலட்சியமாகக்கொண்டு அமைந்துள்ளது புலப்படும். இதனைப் "பெருந்துறைக்கண் பிறைமுடியோன் மலர்க் - குருந்தின்கீழ் மெய்க்குரவன் ஆகியே - இருந்து ஞானத் தியல்பு அருள்செய்திடத் - தெரிந்த அண்ணல்" என்று குளத்தூர்ப்புராணம் கூறுவதால் அறியலாம். மற்றும் மேற்கூறப்பட்ட மூன்று இலட்சியங்களின் முறைமை விளங்குமாறு, "பேதவூர் தனுகர ணாதி

பின்னிட - நாதவூ ரகன்று மெய்ஞ்ஞான நாட்டத் தால் - போதவூர் புகுந்து தம் போகம் மேற்கொள்ளும் - வாதவூரடிகள்'' என்று சிவபுண்ணியத் தெளிவுநூல் சொல்லியிருத்தலும் காணலாம். இனி, இந்தத் தனு, ஞானம், போகம் என்பனவற்றுள் இன்றியமையாச் சாதனமாக உள்ள ஞானம் என்பது குறித்து ஒரு சில கருதுவோம்.

## ஞானச்சிறப்பு:

உலகத்துப் பொருள்கள் உயிருள்ளனவும், இல் லனவும் என இரண்டு பிரிவுள் அடங்கும். இவற் றுள் உயிரில்லாதவற்றைச் சடம் என்பர். உயிருள் ளன சித்துப்பொருள்கள் எனப்படும். சடப்பொரு ளுக்கு உயிரில்லாமையால் அறிவு இல்லை. உயிர்ப் பொருளுக்கு உயிரிருத்தலால் அறிவு உண்டு. இனி, உயிர்ப்பொருள்களும் இருவகையவாய் உள்ளன. அவைகளுள் ஒருசில இடம் பெயராதவை; ஒருசில இடம் பெயர்பவை. இவற்றை நிலையியற்பொருள் என்றும் இயங்கியற்பொருள் என்றும் வேறு பெய ரிட்டுச் சொல்வதுண்டு. இடம்விட்டு இடம்செல்லாத உயிர்கள் அறிவுக் குறைபாடுடையன. இடம் விட்டு இடம் செல்லும் உயிர்கள் படிப்படியாக அறிவு விளக் கத்துக்கான தகுதிப்பாடு உடையன. இங்ஙனம், அறிவு அடைவதற்கான தகுதிப்பாடு கொண்ட இருவகை உயிர்வருக்கங்களுங்கூட அவற்றின் மூல நிலையில் கல்போலக்கிடந்தவையே. இது உயிர், எந்த உடம்பொடும் புணராத கேவலநிலை எனப்படும்.

இப்போது, நம்முடைய நிலையை நாம் சற்றே எண்ணிப்பார்த்தால் நாம், எவ்வளவுதூரம் அறிவு

அடையும் தகுதிப்பாட்டுக்கு வந்துள்ளோம் என்பது புலப்படும். அதாவது, நாம் கல்போலும் கேவலநிலை கடந்து, ஸ்தாவர நிலையைத் தாண்டி, இயங்கியல் உயிர்களுள்ளும் உயர்ந்த நிலைக்கு வந்துள்ளோம். நம் உயிர் செய்துள்ள இந்தப் பிரயாணம் சுலபமான தன்று; கொஞ்சநாளில் முடிந்ததும் அன்று; இதோடுதானே முயற்சியின்றி முடிந்துவிடுவதும் அன்று.

திருவாவடுதுறையிலிருந்து காசிக்கு நடந்து செல்வது எளிதன்று. சென்றான் ஒருவன். சேர்ந் தான் காசிநகரை. திரும்பவும் நடந்து திரும்பிவந் தான் என்றால் அவன் இவ்வளவு பிரயாசை எடுத்துக் கொண்டதன் பயன் என்ன? ஆகையால், காசிக்குச் சென்ற அவன் கங்கையில் மூழ்கிப் பாவம் ஒழியப் பெற்று, விசுவநாதராலயத்தே புகுந்து, அவரது காட்சியில் திளைக்கப்பெறுவதுதானே அவன் மேற் கொண்ட முயற்சிக்குப் பயனாகும். ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் யாத்திரை இதனை நமக்கு நாளும் நினைப் பூட்டி வருகின்றதன்றே! இப்படியே, கல் நிலையி லிருந்து ஆறறிவுடைய் மக்கட்பிறப்பளவும் நீண்ட தொரு யாத்திரையை நெடுங்காலமாகச் செய்து வந்துள்ள நம் உயிரும் முடிவாக இப்பிறப்பில் முழுப் பயனாகிய சிவப்பேறு அடைய வேண்டாமா? இப்படி அடையாமலும், அடைய எண்ணாமலும், மறுபடியும் கல் நிலைக்கு மீள்வது அறிவுக்கு அழகாகுமா? அறிவு முற்றும் மறைபட்டதல்லவா கல்லாம் நிலை. அறிவு படிப்படியாக விளக்கம் சிறிது பெற்றுள்ளதே நமது தற்போதைய பிறப்பு நிலை. முற்றும் விளக்கம் பெற வேண்டுவதே நாம் இனி அடையவேண்டிய நிலை.

நமது இந்த நீண்ட அறிவுக்கான யாத்திரையை நாம் நினைத்துப் பார்த்தால்தான் நமக்கு ஞானம் வேண்டும் என்ற எண்ணம் உதிக்கும். இந்த யாத்திரையின் நீளத்தை நாம் ஒருவேளை நினைக்கமாட்டோமோ என்று நினைத்துத்தான் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அதனைத் தமது திருவாசக மறையின் தொடக்கமாகிய சிவபுராணத்தே எடுத்துக்கூறி நமக்கு ஞானத்தில் நாட்டம் விளைக்கின்றாராவர். அந்தப் பகுதி,

> "பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
> புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
> பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
> கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
> வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
> செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
> எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"

என்பதாகும்.

இவ்வரிகளிலே கல்லையொத்த கேவல நிலையிலிருந்து மானிடராகிய நாம் நீண்ட யாத்திரை செய்து வந்திருப்பதைக் **கல்லாய்** என்றதன்பின் **மனிதராய்** என்று நமது மணிவாசகப்பெருமான் அருளிச் செய்திருப்பதிலிருந்து தெரியலாகும். மனிதர்நிலைக்கு மேற்பட்டது எனக் கருதப்படும் முனிவர், தேவர்நிலைகளையும் தாம் அடைந்து பார்த்துப் பயனின்றி மீண்டும் மானிடர் நிலைக்கே திரும்பியிருப்பதாக அடிகள் அருளிச் செய்திருப்பதும் நாம் நன்கு சிந்தித்துக் காணவேண்டும். முற்கூறியபடி காசி யாத்திரை சென்றவன் கங்கைத்துறை அங்கிருப்பதைக் கேட்டறியாமல் காசிக்கு அப்பாலும் கடுக

நடக்க நேர்ந்து பின்னர் அறியலுற்றுத் திரும்பவும் காசிக்கே வரலுற்றாற்போல் உள்ளது முனிவராய்த் தேவராய்ச் செல்லா நின்ற நிலை என்பதும் இங்கு உணர்தல் பொருந்தும். இவ்வளவும் கூறிய அதனால் நாம் இப்பிறப்பின் பயனாக ஞானத்தையே அடைதற்கு முயற்சிக்கவேண்டும் என்பது தெளியலாம்.

ஞானம் இவ்வளவு முக்கியமானது என்பதை "ஞானம் ஞானவதாம் அஹம்" என்னும் கீதை வாசகத்தாலும் உணரலாம். இக்கீதை நூலின் 10-ஆம் அத்தியாயமான விபூதியோகச் சுலோகங்களில் பகவான் கூறியிருப்பவற்றை இங்கு நமது மணிவாசகப் பெருமான் எடுத்துரைத்துள்ள 'புல் லாகிப் பூடாய்' என்ற பகுதியோடு ஒப்பிட்டுப் பார்த்தலும் நல்லதே. ஞானமே, வாழ்வின் குறிக் கோளை விளங்கவைக்கிறது. பிறவிப்பிணியை வேரற வீழ்த்தவல்லது ஞானமே ஆம். "God is light" என்ற கூற்றின் உண்மையும் ஞானத்தேவையை உணர்த்துவதேயாகும். இனி, நாம் அடையவேண்டிய ஞானத்தின் இயல்பைப்பற்றி ஒருசிறிது பார்ப்போம்.

ஞானத்தியல்பு :

உயிர்கள், ஓரறிவுடையன முதல் ஆறறிவுடையன ஈறாக உள்ளன என்பது தெரிந்த செய்தியாகும். இதனால் உயிர்களின் உயர்வு தாழ்வுப்பாகுபாடே, அவற்றின் அறிவைப் பொறுத்துள்ளது என்பது புலனும். தாவரங்கள்பொதுவாக ஓரறிவுடைப்பிறப்புக் களாகும். ஜங்கமங்களில் ஈரறிவுயிர்களாகிய புழுக்கள் முதல் ஆறறிவுடைய உயிர்களான மனிதர், அசுரர்,

முனிவர், தேவர் என்கிற பிறப்புக்கள் உள. ஆறறிவு உடைய மனித்தப்பிறவியே ஒழுங்கான முறையில் முயலுமாயின் படிப்படியாக உணர்ச்சிநிலை கடந்து அறிவுநிலை தாண்டி, மெய்ஞ்ஞானநிலை எய்தவல்லது. இதனாலேயே 'மனித்தப்பிறவியே வேண்டுவன் தமியேன்' என்று கூறி இப்பிறப்பின் அருமைப்பாடு உணர்த்தப்பட்டுள்ளது.

மேற்கூறப்பட்ட உணர்வு-அறிவு-ஞானநிலைகளில் பஞ்சேந்திரிய இயற்கையே உணர்ச்சியாகும். இது, முற்கூறப்பட்ட செவிலித்தாய் நிகர்க்கும் மாயை, நம் வினைக்கு ஈடாக மாறித்தரும் விளைவாகும். இவ்வுணர்ச்சி என்பது, முற்றிலும் உடம்பு என்னும் கருவியைக் கருத்தாகக் காத்தற்கு உதவியாக உள்ளது. இனி, அறிவு எனப்படுவது, ஆன்மா ஐம்புலப் பொதியாகிய உடம்போடு கூடியபின்னர் ஆராய்ச்சிக்குத் துணையாக அமைவது ஆகும். இது, உள்ளுறுப்பாக நின்று, திருவருள் எனப்படும் நற்றாயின் முற்கூறிய திரோதானம் (மறைத்துணர்த்தல்) இயக்கிட நமது வினைக்கீடாக வேலைசெய்யும் தன்மையுடையது. இது, பெரும்பாலும் வெளிமுகமாகவே இயங்கி, - ஒருவரது கையின்கண் உள்ள சிறு விளக்கொளி, மையிருட்கண் உதவுவதுபோல - அறியாமை யிருளைச் சிறிது விலக்கி உண்மை தெரியச்செய்யும் ஆய்வு ஒளியைப் பயக்கும் தன்மையதாகும். இதன் துணைகொண்டு தான் பகிர்முக ஆராய்ச்சி எனப்படும் விஞ்ஞானமும், நூல்களை ஓதியறிதலும் செயற்படுகின்றன என்னலாம். இந்த ஆராய்ச்சியறிவு எல்லையில்லாது பரந்து செல்வது; என்றாலும், இதனை ஒருவனது நல்வினை

ஒரு முடிவுக்குக் கொண்டுவரத் துணைபுரியும். அங்ஙனம் துணைபுரியும்போது ஒவ்வொன்றின் உண்மை அல்லது மூலம் என்ற இடத்தில் அவ்வாராய்வு வந்து ஓய்வுகொள்ளத் தொடங்கும். இங்ஙனம் சலன அறிவு, தன் சலனத்தன்மை குன்றி ஓய்வுகொள்ளும் நிலைக்கு வரும்போது அதனை உண்மையில் நிறுத்து தற்பொருட்டு உதவுவது முற்கூறப்பட்ட நற்றாயின் பிற்கூறுகிய திருவருள் எனப்படும். இத்திருவருளே மனிதர்க்கு உண்மைநிலை இன்னதெனத் தெரிதற்குப் பெரிதும் துணைபுரிகின்றது. இதுவே மெய்யுணர்வின் உதயநிலை ஆகும். அதாவது ஞானோதயநிலை என்பதாம்.

பொருள்களைப் பிரித்துக் கண்டுகொண்டே செல்லும் விஞ்ஞானிக்கு இறுதியாக அவற்றின் மூலகம் வெளிப்படுவதுபோலவே, இந்தத் திருவருட் பயனாகிய ஞானோதயத்தால் யாவர்க்கும், யாவற்றிற்கும் ஆதாரம் எது என்பது புலப்படலுறும். இந்தப் புலப்பாட்டறிவே ஞானம் எனப்படுவது. தாயார், தன் குழந்தைக்குத் தந்தையைக் காட்டி உணர்த்துவது போலவே, திருவருள் சத்தி, ஞானத்தை (மயக்க அறிவில்லாமையை) விளைத்து அதன் மூலமான சிவத்தைக் காணச்செய்யும். "பாட்டரி" விளக்கு வைத்திருப்பவன், அவ்விளக்கொளியைத் தன் உடம்பின்மேல் படும்படி திருப்புவானாயின், இருட்டில் இருப்பவர்கள் அவ்விளக்குக்கு உடையவனை அவன் கை ஒளியால் கண்டுகொள்வார்கள். இப்படித்தான், சிவத்தின் திருவருள், சிவத்தைப் பக்குவமுற்ற சகலராகியவர்க்குக் காட்டுவது நிகழும்.

முற்கூறிய உவமையில், இருட்டிலிருந்து பார்க்க முயலுகிறவர்கள் பார்வையற்றவரா யிருப்பாராயின், விளக்குக்கு உடையவனைக் காணமாட்டார்கள். அவ்வாறே, திருவருள் வயப்படாதவர்கள், பக்குவக் குறைபாடு உடையவர்களா யிருப்பதாலே சிவத்தைக் கண்டு உணரமாட்டார்கள் என்னலாம். நாக்கில் ரசனைத்தன்மை உள்ளவர்கள் சர்க்கரையிலுள்ள இனிப்பை நுகர்வார்கள்; ஆனால், நாக்குச் செத்துப் போனவர்கள் அந்த இனிப்பை உணரமாட்டார்கள். பிறர் சொல்வதைக்கொண்டு நம்பியோ நம்பாமலோ வாழ்வர்.

இவ்வாறே, திருவருள் எனப்படும் ஆற்றலுக் குட்பட்ட ஞானிகள், சிவதரிசனப்பேறடைவது நிகழும். மாசற்ற இவர்களது ஞானம், கடலிற் கலந்த நதிபோலப் பூர்த்திப்பாடு எய்திவிடும். இப்பூர்த்தி யுற்றிடும் நிலைமையே ஞானபூரணம் எனப்படும். இத்தகைய நிலை பழுக்கப்பெற்றவரே நம் ஸ்ரீ மாணிக்க வாசகசுவாமிகள். ஆதலால், இவர்களுடைய பேச்சு ஞானவாசகமாயிற்று என்னலாம்.

ஞானவாசகம் எனப்படுவது, மூலகத்தைக்கண்டு கூறுகின்ற விஞ்ஞானிகளின் பொருட்கூற்றைப் போல்வதாகும். ஆதலால், திருவாசகம் முழுதும் - திருக்கோவையார் முழுதும், சிவத்தையும் - சிவாநு பவத்தையும் அடைந்து (கண்டு) நமக்காகக் கூறப் பட்ட உண்மையுரை என்னத் தடையில்லையன்றே! இந்த நுட்பத்தைத்தான், "சிவபெருமான் எழுதிக் கொள்ள மணிவாசகரால் பாடப்பட்டது" என்ற வரலாற்றுரை நமக்கு விளக்குகின்றது. தன் எதிரே

சொரூபசிவத்தைத் தடத்தத் திருமேனியினிடமாகக் கண்டுகொண்டே இந்நூற் செய்திகளை நம்சுவாமிகள் அருளிச்செய்கின்றாராதலால் - இந்நூற் செய்திகளை நாம், ஆராய்ச்சியைக்கொண்டு அநுபவ முடிபாக மூலகத்தைப் பிரத்தியட்சமாகக் கண்டு சொல்கின்ற விஞ்ஞானியின் கூற்றைப்போலும் உண்மையென மதித்துப்போற்றக்கடமைப்பட்டுள்ளோம். சுவாமிகள்,

" அவன் அருளாலே அவன்தாள் வணங்கி "

எனவும்,

" கண்ணால் யானும் கண்டேன் காண்க "

எனவும்,

" வாக்கு உன் மணிவார்த்தைக்கு ஆக்கி "

" மாசில் மணியின் மணிவார்த்தை "

" மறைபயின்ற வாசகன். . . . அருள் அறிவார் "

எனவும்,

" இருந்துதி என்வயிற் கொண்டவன் "

எனவும் தமது நூல்களுள்ளே தாமே வெளியிட்டுக் கூறியிருத்தல், மேற்குறித்த கருத்துக்கு உறுதி பயக்கவல்லதாம்.

இதுகாறும் சொல்லிவந்தவைகளால் உணர்ச்சி வேறு; அறிவு வேறு; ஞானம் வேறு என்பதும், ஞானமே நாம் அடையவேண்டிய சாலச்சிறந்த பேறு என்பதும் அறியலாம். இங்ஙனம், ஞானம் எய்தப் பெற்றோர்பேச்சு எதுபற்றி, எவ்வாறு நிகழும் என்பதையே நம் சுவாமிகள் அருளிச்செய்துள்ள எட்டாம்

திருமுறை நூல்கள் உணர்த்திநிற்கின்றன என்பது உணரப்படும். இதன்மேல், இத்தகைய சிறந்த ஞான நிலைக்கு ஏறும் சமயப்படிமுறைகள்பற்றி ஒரு சிறிது பேசுவோம்.

## சமயப்படிமுறை:

மனிதப்பிறப்பினை அரிதின் அடையப்பெற்றுள்ள நாம், முதற்கண் உண்மை பேசுதல், உண்மை காண முயலுதல், துன்பம் செய்யாதிருத்தல், அறம்பல ஆற்றல், ஐம்புல விழைவினை அடக்குதல் முதலிய நல்ல ஒழுக்கங்களை மேற்கொண்டு நமது வாழ்வினை நடத்தப் பயிலவேண்டும். ஆசை அல்லது மாயை எனப்படும் நச்சுமரத்தை வெட்டிவீழ்த்த வல்லது நல்லொழுக்கம் எனப்படும் கோடரியே ஆகும். இதனாலேயே "ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" என்றார் திருவள்ளுவர். எல்லாரும் இப்படிப்பட்ட எல்லா நல்லொழுக்க நெறிகளையும் ஒரு பிறப்பிலேயே கைக்கொண்டு ஒழுகிவிடமுடியாது; இதற்கான சூழ்நிலைகள் பற்பல பிறப்புக்களிலே வாய்க்கப்பெறும். கிடைக்கும் சூழ்நிலைகளையெல்லாம் ஒருவன், நல்லொழுக்கத்துக்கு ஏற்ற வாய்ப்புடையனவாகத் தன் அறிவாற்றலால் ஆக்கி அமைத்துக்கொள்ளலும் கூடும். இந்த நல்லொழுக்கப்படியே முதற்படியாக நின்று ஒருவனை அருளறம் மேற்கொள்ளச் செய்யும். சமண, பவுத்த சமயங்கள் இவ்வொழுக்க நெறியைத்தான் பெரிதும் வற்புறுத்துகின்றன. இதனால் சமுதாயம் என்றும் ஒன்றுபட்டு நன்றெய்தும் என்பதைக் கண்கூடாக அறிந்துகொள்ளலாம். இதனால், சன்மார்க்கம் எனப்படும் ஞானநெறிக்கு ஒழுக்க அடிப்படையில் வகுக்கப்

பட்டவையான புறப்புறச் சமயங்கள் முதற்படியாக இருத்தல் காணலாம். இப்புறப்புறமெனப்படும் முதற் படியுள் நாத்திகம் (லோகாயதம்) முதலிய ஆறு அடுக்குகள் உள்ளன. இவை யாவும், ஞானநெறியுள் வியாப்பியமானவையே ஆகும். இந்த நெறிதான் சரியானது என்று வாதமிடுபவர்களைப் பிராகிருத சாமானிய புத்திமான்கள் என்னலாம்.

அறிவு விளக்கம் பெறுவதற்கு இம்முதற்படியும் துணைசெய்து நிற்றலால் இதனுட்பட்ட லோகாயதம் முதல் ஆருகதம் வரையில் உள்ள ஆறு மார்க்கங் களும் சமயம் என்றே கூறப்படலாயின. இவ் ஆறு மார்க்கங்களும் பிறவும் ஒன்றோடு ஒன்று ஒவ்வாதபடி தத்தம் சாத்திரங்களை யாத்துள்ளன ஆதலால் அறிவு, விளக்கம் எய்துதற்குப் பதிலாக மயக்கம் எய்தலுறும் என்பர். இதனையே, நம் சுவாமிகள் தெள்ளேணங்கொட்டிக்கொண்டு,

"உவலை சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்
சவலைக் கடலுளனாய்க்கிடந்து தடுமாறும் கவலை"

என்று கூறிக்காட்டியுள்ளார்.

இனி, மேற்கூறிய ஒழுக்கப்படி எனப்படுவதாகிய பிராகிருத சாமானிய அறிவு மேற்கொண்டு ஒழுகு கையில் இதனுட்பட்ட மாந்தர், தங்களுடைய வாழ் வில் ஏற்படும் பற்பல சூழ்நிலைகளைத் தம்முடைய அறிவுகொண்டு பயன்படுத்திக்கொள்ள மாட்டாத வராய்த் திகைக்கத் தொடங்கி மேன்மேலும் ஆய்வு நிகழ்த்தியதன் பயனாக எதனையும் இணக்கி வயப் படுத்தவல்ல பேரறிவு வேண்டும் என்ற முடிவுக்கு

வரலாயினர். இந்த நிலையில் தாம் பெற்றுள்ள அறிவு குறைபாடுடையது என்றும், இதற்கு இதனின்மேல் ஆனதோர் அறிவின் (ஒளியின்) துணை தேவையா யுள்ளதென்றும் ஓர் அறிவு விளக்க வளர்ச்சி ஏற்பட லுற்றது. இத்தகைய விளக்கநிலை அடைந்தவர்களைப் பிராகிருத விசேட புத்திமான்கள் என்பர். இவர்களாற் காணப்பட்டனவே புறச்சமயங்கள் எனப்படும் ஆறும். இவர்களைத் தார்க்கிகர் முதல் பாஞ்சராத்திரர் எனப் பெயரிட்டழைப்பர். இவர்கள் படிப்படியாகத் தருக்க மிட்டு அறிவு வளர்த்துக் கொண்டு ஆன்மாவுக்கு மேலாகத் தெய்வம் என்ற ஒன்று உண்டு என்ற எண்ணத்துக்கு ஏறியவர்களாவர். இவர்களுடைய நிலையே ஞானவளர்ச்சிப்பாதையின் இரண்டாவது மைல்கல் ஆகும். இந்த நிலையினை நம் சுவாமிகள்,

> "புல்வரம்பாய பலதுறை பிழைத்தும்
> தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி
> முனிவிலாததோர் பொருளது கருதும்"

நிலை என்பர். இதுவே, ஞானசாதன நெறியில் இரண்டாம் கட்டம் ஆகும்.

இப்பால், தமதறிவைக் கலைஞானத் துறையே சிறந்ததெனமதித்துச் செலுத்தலுற்றனர் பல்லோர். இவர்கள் அறிவு வளர்ச்சி கலைஞான சித்தியளவுக்கு ஏறியது. இவர்களைக் கலைஞான சித்தியாளர்கள் என நாம் கூறலாம். இவர்கள் கண்ட சமயத்துறைகளும் ஆறு வகையினவாம். இந்த ஆறு வகைகளையும் அடக்கி அகப்புறச்சமயம் என்ற பெயரிட்டு நூல்கள் கூறும். இந்த ஆறு நெறிப்பட்டோர் அவைதிகபாசு பதர் முதல் ஐக்கியவாதசைவர் இறுதியாகப்பெயரிட் டழைக்கப்படுவர். இத்தகையவர்கள், மூலகமாகிய

முதல்வனுக்கு முதன்மைதாராது, மூலகத்தின் ஆற்றல் போல்வதான முதல்வனுடைய சத்திக்கு ஏற்றமளிப்பவராவர். இது, கதிரோனை எண்ணுமல் தாம் தற்போது துய்க்கும் கதிரினை (கிரண ஒளியை) மட்டில் மதிப்பதுபோன்ற அறிவுடைமை ஆகும். இம்மூன்ரும் படிக்கட்டானது, இறைவனின் ஆற்றலை மதிக்கும் அளவுக்கு மாந்தரறிவினை வளர்த்துதவியுள்ளது என்னத் தடையில்லை. ஒரு பச்சைக்குழந்தை, செயற்கைப் பால்புட்டியின் பக்கத்தே படுத்து அழுவதைவிடச் சொந்தத் தாயின் பக்கத்தே படுத்துக்கிடந்து பாலருந்துவது சாலச்சிறந்ததன்றே! பசிதணித்தற்கு இவ்விரண்டு கிடக்கைகளும் பயன்படுவன என்ருலும், பின்னதே மேலானதாகுமென்பது எல்லாக் குழந்தைகட்கும் உடன்பாடாம். இக்கருத்தினை,

> " ஆறு கோடி மாயா சத்திகள்
> வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின "
>
> " கலாபேதத்த கடுவிடம் எய்தி "
>
> " தத்தம் மதங்களே அமைவதாக அரற்றிமலைந்தனர் "
>
> " வேதியரும் சரதமாகவே சாத்திரங்காட்டினர் "

என்னும் இவ்வித உரைகளால் நம் சுவாமிகள் நமக்கு அறிவுறுத்தியுள்ளனர் எனத் தெரிதல்கூடும். இதுவே மூன்ரும் கட்டம் என்க.

இதன்மேலும், அறிவுவளர்ச்சி தளர்ச்சியின்றி நடந்தது. இதன் பயனுக எழுந்தன அகச்சமயநெறி எனப்படும் ஆறு பிரிவுகள். இவை பாடாணவாத சைவம் முதலாகச் சிவாத்துவித சைவம் இறுதியாக

விவரித்துக் கூறப்படும். இவ்வகை அறுவகையினரும் சைவம் என்னும் மார்க்கத்தினரே எனினும், தமக்குள் ஒருமைப்பட்ட சித்தாந்தம் கொண்டிலர். இவர்களைத் தத்துவஞான சித்தியுடையார் என்பர். இவர்கள் முற் கூறப்பட்ட (3×6) பதினெட்டுவகையினரைக் காட்டிலும் மெய்யுணர்வு வளர்ச்சியில் மேம்பாடுடையவர் தாம். எனினும், இவர்கள் சைவமென்னும் ஒரு நெறி வழியிலே செல்பவராயிருந்துகொண்டே தமக்குள் ஒருவரை ஒருவர் ஒவ்வாத சிறுசிறு வேறுபாடுகளைப் பெரிதென மதித்துப் பிணக்கமுற்று நடப்பவராவர். எனவே, இவர்களுடைய ஞானவளர்ச்சியானது பல முடிபுகளைக்காட்டும் பேதாந்தமானதே அன்றி ஒரே முடிபுக்கு உட்படுத்தும் சித்தாந்தமானதன்று. இவர்கள், சதுர்கொண்டு அறியும் மால் உடையவர் ஆவர். ஆகையினால், இத்தகையார் ஞானமும், ஞான நெறிக்கான சாதனத்தை அறுதியிட்டுக் காட்டும் திறமை உடையதன்றென்பர். ஆதலின், இந்நெறியும் கோணுதல் உடையதாயிற்று என்ப. இதுவே நான்காம்படி எனப்படல் தகும்.

இதனால், கோணுதல் இல்லாததாய், யாவர் கூறும் கோட்பாடுகளையும் தன்பாலுடையதாய், அவரவர் கோட்பாடுகளிலும் உள்ள குறைகளை உணர்த்த வல்லதாய், யாவருடைய கோட்பாடுகளும் தன்பாலடங்கும் வியாபகமுடையதாய், ஐயந்திரிபுணர்வுகட்கு இடமில்லாததாய், எல்லாம் அடங்குமாறு நன்கு ஆய்ந்து தெளிந்து சிவத்தால் ஆதியிலே உரைக்கப்பட்ட சித்தாந்தமுடையதாய், எதிரிகளும் ஒப்புக்கொள்ளும் முடிபினை உடையதாய், தனக்கு மேற்பட்டதொன்று இல்லாததாய், எக்காலத்துக்கும்

எந்தேயத்திற்கும் எந்த வர்த்தமானத்துக்கும் ஏற்புடையதாய், வேதஉபநிடத ஆகம சாத்திர சம்மதத் தெளிவுடையதாய் விளங்கும் "ராஜபாட்டை" போல்வதொரு ஞான சாதன நெறியே சித்தாந்தநெறி எனப்படும். இது சிவத்தாலும், சிவத்தாலுணர்த்தப் பட்ட சிவஞானியராலும் தந்து நிறுவப்பட்ட தனிப் பெரும் பெருமை உடையது. இந்நெறியே குற்றமற்ற ஞானமார்க்கம் ஆம். இதனை நன்னெறி எனவும், சன்மார்க்கம் எனவும் கூறுவர். நிறைந்த ஞான வஸ்துவாகிய சிவத்தாலும் சிவஞானத்தவராலுமே இந்நெறி அநாதியாகவே அமைக்கப்பட்டிருத்தலின் இதுவே - இது கூறும் நெறியே - ஞானமார்க்கம் எனவும், செந்நெறி எனவும் செப்பப்படும். இந்த நெறியே நம் ஸ்ரீ மணிவாசகர் மேற்கொண்டு ஒழுகியதாகும். இதனை, இவர்கள் மேற்கொள்ளும்போது, இவரைப் புறப்புறச் சமயத்தார் முதல் அகச்சமயத்தார்வரை உள்ளவர் பரிகசிக்காமல் இருந்திரார். அவர்கள் உண்மை உணர்தற்பொருட்டே அவர்களுடைய பழித்துரைக்குத் தாம் நாணிச் சித்தாந்த நெறியைக் கைவிடாமல் மேற்கொண்டு நடந்து சித்தாந்த முத்தியை எய்திக் காட்டினர் நம் சுவாமிகள். இதனை இவர்கள் திருவாய்மலர்ந்தருளிய,

> "சகம் பேய்என்று தம்மைச் சிரிப்ப
> நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
> பூணது வாகக் கோணுத லின்றிச்
> சதுர்இழந்து அறிமால் கொண்டு சாரும்
> கதியது பரம அதிசயம் ஆக"

என்னும் வாக்கால் அறியலாம். ஆகவே, நம் சுவாமிகள், சிற்சிலர் கூறுவதுபோலப் பிறசமயநெறியினர்

ஆகாமல் தாமே கூறிக்காட்டுகிறபடி சித்தாந்தச் செந்நெறியாகிய ஞானமார்க்க அநுஷ்டிதர் என்று நாம் கொள்ளல் தக்கதாம். இனி, ஞானமார்க்கம் கூறும் ஞானசாதன நெறிகளைப்பற்றிப் பகருவோம்.

நாம், இதுகாறும் கூறிய ஆற்றால் சித்தாந்த சைவநெறியே ஞானபூரணம் எய்துவதற்கான சிறந்த-முடிவாகிய-நெறி எனத் தெளியலாம். இது, முன்னே கூறப்பட்டவண்ணம் நான்கு கூறுபட்டு நடக்கும் இருபத்துநான்குவகைச் சமயநெறிகட்கும் அப்பாற் பட்டதாயும், அவற்றைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டதாயும், அவற்றிற்கெல்லாம் பொதுவாயும், அவற்றின் உள்ளீடாகவும் உள்ள அநாதியான நற் சமயம் என்னலாம். "எல்லாப் பொருளும் இதன்பால் உள; இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை யால்" என்று திருக்குறள் நூலுக்கு உரைக்கப் படும் சிறப்புரை இந்தச் சித்தாந்த நெறிக்கும் பொருந்துவதாகும்.

நூலுணர்வுப்படிமுறை :

மாந்தர்கள், அறிவு விரிவதற்காகவும், அநுஷ் டான அறிவை விரைவில் அடைவதற்காகவும் நூல் களை ஓதுவர். இந்நூல்கள் யாவும் உலகநூல், கடவுள் நூல் என்ற இரண்டு பிரிவினுள் அடங்கும். பொதுப் படக் கூறின் உலகநூல்கள் யாவும் மனிதனுடைய உள்ளத்தை வெளிப்பொருளிலே செலுத்தி மேன் மேலும் ஆசையைப் பெருக்கும் உணர்ச்சியறிவையே வளர்க்கும். கடவுள் நூல்கள் எனப்படுமவை, மனித னுடைய உள்ளத்தை அகமுகமாகத்திருப்பி எல்லாப் பொருட்கும், எல்லாச் செயற்கும் மூலகம் எதுவென

அறிவித்து அப்பொருளோடு ஒன்றும் பிரேமை கொண்டஞானத்தைத விளக்கும். இக்கருத்து யாவருக்கும் உடன்பாடாம். இதனாலேதான் உலக நூல்களை எல்லாம் ஓதுவதிலேயே காலங்கடத்திவிடாமல், ஞான நூல்களையே ஓதுமாறு நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன.

இந்த ஞான நூல்களுள்ளே சிறந்தது வேதம் எனப்படும். இவ்வேதம் வடமொழியில் நான்காக வழங்கும். இந்நான்கு மறைகளும் இறைவனால் ஆன்மாக்களின் ஈடேற்றத்துக்காகவே அருளிச்செய்யப்பட்டவை. வேதம் எனப்படுமது எம்மொழியாலமைவுற்றிருப்பினும், அதன் கருத்து இறையுண்மையை உணர்த்துவதே ஆகும். நாததத்துவத்துள் எல்லா மொழிகளும் அடங்கும். ஆதலால், எல்லாமொழிகளின் வேதக் கொள்கையும் அடிப்படைப் பொதுமையே கொண்டதாகும். கணக்கைப் போதிக்கும் கணித நூல்களின் மொழிகள் வேறுபட இருக்கின்றன; என்றாலும் கணித அடிப்படையான கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் தத்துவம் எந்த மொழியினருக்கும் எந்த நாட்டினருக்கும் ஒன்றேயாம். அது எப்படிப்பட்ட மொழிப்பற்றும், நாட்டுப்பற்றும் உடையாராலும் மாற்றமுடியாத உண்மை ஆகும். இவ்வாறே உள்ளன பன்மொழிகளாலியன்ற மறைவாசகங்கள். வேதம், சுருதி என்னும் பெயராலும் அழைக்கப்படும். இது பரம்பரை பரம்பரையாகக் காதால் கேட்டுக்கேட்டுச் சொல்லிக் காப்பாற்றிவரப்பட்டுள்ளது. அதன் பொருளில் மாறுபாடு நேரிடாமலிருப்பதற்காகவே அதன் ஒலியும் சொல் அமைப்பும், மாற்றம் அடையாதிருக்கும் முறைகள் (அங்கங்கள்)

ஏற்படுத்தப்பட்டுள்ளன. இதனால், வேதங்களின் மூலப்பொருள் எப்போதும் மாறுபடாமலிருக்க முடிகிறது. இந்த மூலப்பொருள் மஹாவாக்கியம் எனப்படும். இந்த மஹாவாக்கியத்தின் மூலப் பொருளை அடிப்படையாகக் கொண்டு தொகுப் புண்டனவே உபநிஷதங்கள் அல்லது வேதாந்தம் எனப்படும். தர்ம அர்த்த காம மோக்ஷங்கள் வேதத் தில் சொல்லப்படுகின்றன. இதனாலே வேதம் என்ற பெயர் தரப்பட்டுள்ளது. ஆனால், வேதத்துள் மேற் கூறப்பட்டவைகள், மக்களின் பக்குவபேதங்கட்கு ஏற்பப் பற்பல வகையில் பொதுமை முறையில் கூறப்பட்டுள்ளன. ஆதலால் ஞானிகளே வேதார்த் தத்தை உள்ளபடி அறிதல்கூடும். இதனா லேயே, வேதத்தைப்பற்றிக் கூறவந்த திருமூலர், "வேதத்தை விட்ட அறமில்லை வேதத்தின் - ஓதத் தகும் அறமெல்லாம் உள தர்க்க - வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற - வேதத்தை ஓதியே வீடு பெற்றார் களே" எனக்கூறியருளியுள்ளாராவர். ஆகவே இம்மை மறுமைகளையும்பற்றிப் பேசுவது வேதம் என்னலாம். இதனாலேதான், வேதத்தின் முடிந்த கோட்பாடு களையே கொண்டுள்ள வேதாந்தம் தொகுப்புண்டது. இது வீடுபேறு எனப்படும் பரவாழ்வுபற்றியேபேசும். என்றாலும், இவ்வுபநிடதவாசகங்கள், பற்பலராலும் பற்பலவிதமாகப் பொருள் செய்யப்பட்டு ஒன்றோடு ஒன்று முரண்பாடுடையவைபோலக் காணப்படலுற் றன. இம்முரண்பாடுகளை நீக்கி ஒருமைப்பொருள் காண்பதற்குக் குருவருள் தேவையாம். இன்றேல், உபநிடதம் எனப்படும் வேதாந்தத்திலும் தெளிவும் உண்மையும் காண்டலரிதாகிவிடும். ஆனதுபற்றியே,

திருமூலர், வேதாந்தத்தைப்பற்றித், "திருநெறி யாவது சித்தசித் தன்றிப் - பெருநெறி யாய பிரானை நினைந்து - குருநெறியாம் சிவமாநெறி கூடும் - ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே" எனக் கூறிக் காட்டியுள்ளார். ஆகவே, உபநிடதங்களுள்ளும் பொதுவும், பொதுச் சிறப்பும், சிறப்பும் ஆகி உண்மை உரைப்பன உள என்பது பெறப்படும். சுபாலம் முதலிய உபநிட தங்கள் பொதுப்படவுரைப்பன; சாந்தோக்கியம் முதலன பொதுச்சிறப்பின எனப்படும். அதர்வ சிகை, அதர்வசிரம், சுவேதாச்சுவதரம், கைவல்லியம் முதலிய உபநிடதங்கள் முத்திநிலையேபற்றி உரைப் பனவாதலால் சிறப்பின ஆகும். எனவே உபநிடதங் கட்கு உண்மைப்பொருள் காண்போர், சிறப்பியல் புடைய உபநிடதங்கட்குத் தக்கவாறு மற்ற உபநிட தங்களைப் பொருட்படுத்திக்கொள்ள வேண்டியதா கிறது என்பர்.

இவ்வாறு, உபநிடதங்களுள்ளும் முரண்பாடு ஒருசிறிது இருத்தலால், சைவசித்தாந்தத்திறன் புலப்படற்பொருட்டு ஆகமங்கள் அருளிச்செய்யப்பட் டுள்ளன. வேதத்தை நோக்க ஆகமங்கள் சிறப் பியல்புடையவையானாலும், ஆகமங்களுக்குள்ளேயும் சாமானியர்கட்கு முரண்பாடிருப்பதுபோலக் காணப் படும். ஆதலால், இவைகளையும் ஞானபாதத்துக் கேற்ப ஒருமைப்படுத்திப் பொருள்கொள்ளவேண்டி யுள்ளது. இங்ஙனம், ஒருமைப்பட உணர்தற்குச் சற்குருவின் வாசகம் வேண்டியுள்ளது. இவ்விதமாகச் சற்குருவின் வசனமின்றிப் பொருள்கொள்ளப் புகு வோர், உப்புநீரைப் பருகித் தாகந்தணிக்கத் துணிப வரை நிகர்ப்பர். எனவே, குரு திருவருள் இல்லாது

உண்மையுணர்தல் தெளிவுபடாது என்பது தெரிய லாம். இக்கருத்தினை, "அஞ்சன மேனி அரிவை யோர் பாகத்தன் - அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம் - அஞ்சலி கூப்பி அறுபத் தறுவரும் - அஞ்சாம் முகத்தில் அரும்பொருள் கேட்டதே" என்னும் திருமந்திரப்பாடல் காட்டும். இக்கருத்துக் களால், ஞானமானது உலகநூல்களால் அமைவ தன்று எனவும், வேத உபநிடத ஆகமங்களால் உணரப்பட வேண்டுவது எனவும், அங்ஙனம் உணரப் புகுமிடத்தும் சற்குருவின் திருவாசகத்தாலே உண ரப்படவேண்டும் எனவும், இன்றேல் யாவும் நீர்மேல் எழுத்துக்கு நிகராகுமெனவும் நாம் தெரிதல் நன்று. "வேதத்தெளிவாம் சைவ சித்தாந்தம்" என்பதும், "வேதப் பயனும் சைவம்" என்பதும் ஆகிய பேருரை களை இங்கே நாம் சிந்தித்தல் நலம்.

இவ்வாறு வேத வேதாந்த ஆகமாதிகள் எடுத் துரைக்கும் முடிந்த முடிபான ஞானத்தைத் தெளி வுறக் குருமுகமாக அறியப்பெறுவதே ஐயம் நீங்கிய அநுபவத்துக்கு நம்மை ஆளாக்கும். இவ்விதம் ஐய மற்ற அநுபவத்திற்கான உண்மை நெறி அல்லது ஞான நெறியைக் கூறுவதே சாத்திரமாகும். எல்லா வித ஐயப்பாடுகளையும் களைந்து, எல்லாவித உண்மை களையும் ஒருமைப்படுத்தி, எல்லார்க்கும் ஒருமுகமாக உரைப்பதே சாத்திரத்தின் சிறப்பாகும். இங்கும் மொழிபற்றிய உயர்வு தாழ்வு கொள்ளுதல், அங்ஙனம் கொள்ளுவோரைச் சாத்திரம் கற்றற்கு அல்லது கேட்டற்கு அருகதையற்றவராகச் செய்திடும் என்க. " தமிழ்ச்சொல் வடசொல் எனும் இவ்விரண்டும் -

உணர்த்தும் அவனே உணரலும் ஆமே" என்ற திருமந்திரவரிகள் இங்கு நினைப்பது நன்றாம்.

"ஞானமாவது வீடுபயக்கும் உணர்வு" ஆதலால் மெய்ப்பொருள்காண்பது இன்றியமையாததாயிற்று. இம்மெய்ப்பொருள் காணும் முறைமையினையே சாத்திரம் சாற்றுவதாகும். சாத்திரவுரைகள், உலகத்திலுள்ள அசையும்பொருள் அசையாப்பொருள்களாகிய இவற்றின் வரலாறு உணர்த்திக் கற்பனை போக்கி, தத்துவங்களின் தன்மைகளைத் தெரிவித்து, அவற்றை அவைகளின் காரணங்களில் ஒடுக்கிச் செல்லுமுறை சொல்லி முடிவாகக் காரண காரியமில்லாப் பொருளாகிய பரம்பொருளை உணர்வதற்குக் கருவியாய் நிற்கும் அளவுக்குத் துணையாவனவாம். சமய நூல்கள் இங்ஙனம் பெறப்படும் ஞானத்தினை அபர ஞானம் எனவும், பரஞானம் எனவும் பாகுபடுத்தி உரைக்கும். இரண்டையுமே பொதுப்படச் சிவஞானம் என்றும் செப்புவதுண்டு. இவ்விரண்டு ஞானங்களும் சிவத்தையே உணர்த்துவதுபற்றி இங்ஙனமழைப்பர். அபரஞானம் என்பது மேலே சொல்லப்பட்ட மறை ஆகமம் சாத்திரங்களால் உண்டாவதாகும். இதனை நூலறிவு என்றும் ஆராய்ச்சியறிவு என்றும் கூறுவர். இந்த அறிவு, பரஞானம் எனப்படும் அநுபூதி ஞானத்தைப் பயக்க உதவுவதாம். அநுபூதி ஞானம் எனப்படும் பரஞானம் குரு திருவருளால் விளைவதாகும். ஆகவே, அபரஞானம் எனப்படும் ஆராய்ச்சியறிவில் ஒருமைத்தன்மை யாவருக்கும் உண்டாக்கி அதனை அநுபவ ஞானமெனப்படும் பரஞானத்துக்கு அருகதையாக்கிவிடவேண்டுமென்ற பெருங்கருணையினாலே 'வாலறிவன்' ஆகிய சிவபெருமான் ஆகமாங்

தத்தைத் தெளிவாக உணர்த்தும்பொருட்டு எப்பொருளையும் முப்பொருளில் அடக்கிக்காட்டுவதான சிவஞானபோத சாத்திரத்தைப் பரம்பரையாக நின்றுதவும்பொருட்டும், மக்களின் மயர்வு அறும் பொருட்டும் உதவியருளலாயினர். இதுவே ஸ்ரீகண்ட தேவர்பால் நந்திஎம்பெருமான் கேட்டருளியதாகும். இதுவே சனற்குமாரர் முதலிய முனிவர்கணங்கட்கு அளிக்கப்பட்டது. இதனை, "நந்தி முனிகணத்து அளித்த உயர் சிவஞானபோதம்" எனக் கூறிச் சிறப்பித்துள்ளனர் மாதவச்சிவஞானயோகிகள். இத்தகைய விழுப்பம் அமைந்த சிவஞானபோதநெறியே நம் ஸ்ரீ மணிவாசகப்பெருமான் உபதேசம் பெற்று ஒழுகலுற்றதாகும் என்க!

இந்தச் சிவஞான போதநெறியே சிற்றறிவினராகிய நாமெல்லாரும் நற்கதிபெறவேண்டும் என்ற கருணையினாலே ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாரால் தமிழில் அருளிச்செய்யப்பட்டது. இச்சிறந்த போத நெறிதான், துறைசைத் திருமரபினால் உலகுக்கு ஓது முறை நிற்குமுறைகளால் உணர்த்தப்பட்டுவருகின்றது. இந்தப் போதநெறியுணர்த்தும் சிவஞானபோத சாத்திரமே, சரியை முதலிய மூன்றுபாதப் பொருள்களையும் ஆராயும் ஏனை நூல்களினும் மேம்பட்டு ஞான நன்னெறியினைப் போதிக்கும் பெருமை உடையது. இத்தகைய ஞானமார்க்கத்திலே ஒழுகிச் சிவப்பேறு எய்தி நமக்குத் தெளிவுறுத்திய சமயாசாரியராவார் நம் ஸ்ரீ மணிவாசகப் பெருந்தகையார். இதுகுறித்தே, "பார், ஆதிநூல் நெறிசேர அருளிய வாதவூரன்" எனத் திரு ஏரகப்புராணமுடையார் போற்றுதலாயினர் என்னலாம். மேற்கூறப்பட்ட சிவஞானபோதச்

செம்பொருளே ஸ்ரீ மணிவாசகப்பெருமாற்கு ஞானு சாரியராம் சிவத்தால் உபதேசிக்கப்பட்டதென்பர். எனவே, வேதாகமங்களின் முடிவான ஞானபாதப் பொருளே சிவஞானபோதத்தே சித்தாந்தப்படுத்திப் பேசப்படுகின்றது எனத் தெரியலாம். வேதம் பசு எனவும், சிவஞானபோதம் நெய்யினுறுசுவை எனவும் பேசப்படுதலும் வேதபோதத் தொடர்பினை வலி யுறுத்த வல்லதாகும்.

**சிவஞானபோதச் சிறப்பு:**

பெருமையில் ஒப்பற்ற சிவஞானபோதம் எனப் படுவது பதி, பசு, பாசங்களைத் தடத்தத்தினும் சொரூபத்தினும் நிறுத்திப்பேசும். வேதத்திரயீயின் நடுவணதாகிய பஞ்சாக்கரத்தின் நடுவிடமாம் சிவ என்னும் ஈரெழுத்தை முதற்கண்கொண்டது. திருப் பெருந்துறையிலே மானிடவடிவம்கொண்டு பரமா சாரியராக எழுந்தருளிய சிவபெருமானது திருக் கரத்தே அமைந்தது. மெய்ப்பொருள், அதனையறிதற் குத் துணையாம் அருள், அதனாலடைந்த தெளிவை அநுபூதியில் வைத்து நிச்சயித்தலாகிய போதம் இம் மூன்றையும் தெளிவிப்பது. அபுத்தி பூருவம் முதல் உண்மைஞானம்வரை கூறப்படும் பத்துவகைப் புண் ணியங்களில் இறுதியதாக உரைக்கப்படும் உண்மை ஞானப் புண்ணியத்தை முக்கியப் பொருளாகப் பொதியப்பெற்றுள்ளது. தத்துவரூபம் முதல் சிவ போகம் இறுதியான பத்துவகை உண்மைஞானத் தைத் தன்னுட்கொண்டது. இத்தசகாரியங்களையும் சுத்தாவத்தை ஐந்தில் அடக்கிப் போதிப்பது. அந்த அவத்தைகளை ஞானத்துச் சரியை ஆதிய நான்கு

பாதங்களுள்ளே அமைத்து உரைப்பது. இவற்றை ஆன்மதரிசனமாதி மூன்றனுள் அடக்கி விளக்குவது. சிவாநுபவ இலக்கியத்துக்குரிய சிவாநுபவ இலக்கணமாய் இலகுவது. ஞானமார்க்க அநுட்டிதர்கட்கு இந்நூலே பிரமாணமாம். இதனை வைதிக சைவ சித்தாந்தம் என்றும் அழைப்பர்.

இனி இச்சிவஞானபோத சாத்திரத்தால் நாம் அறிய வேண்டுவதாகிய ஞானம் மூன்றும். அவை பாசஞானம், பசுஞானம், பதிஞானம் என்பனவாம். தீக்ஷைபெற்று மோக்ஷத்திலே நாட்டமுடையவர்கள் இவற்றைக் குருவினிடமாகச் சிரவணம் செய்தற்கு உரியவராவர். இங்கு நாம், "புறச்சமய நெறிநின்றும்" எனத்தொடங்கும் சித்தியார்ப்பாடல் கருதுதல் இது காறும் நாம் பார்த்துவந்த கருத்துக்களையெல்லாம் தொகுத்துக் கொடுக்கும் இயல்புடையதாகும்.

மூவகை ஞானங்கள் :

1. பாசஞானம்: மேற்சொல்லப்பட்ட மூவகையான ஞானங்களுள்ளும் பாசஞானம் எனப்படுவது வைகரி முதலிய வாக்கினைச்சார்ந்த வேதசாத்திரம் முதலிய கலைஞானங்களும், அசபையும் ஆகிய சொற்பிரபஞ்சமும் - நிலம் முதல் நாதம் ஈறுகிய பொருட்பிரபஞ்சமும் - ஆகிய இவற்றின் மூலமாக ஆன்மாவினிடம் நிகழுகின்ற சுட்டுணர்வு ஆகும். இந்த ஞானம், பதிஞானம் விளங்குவதற்கு ஏதுவாகப் பயன்படுதல் கூடும். ஆகலின், இவற்றை ஓதுதல் ஓதுவித்தல் கூர்தல் வேண்டுவதாயிற்றென்ப. ஆன்மா, கருவிகளோடுகூடி அறிவது பாசஞானம் எனப்பட்டது.

இதனால் பிரபஞ்சம்யாவும் கானல்நீர் போல்வதென்ற உண்மை தோன்றப் பெறலாகும். இதன்பயனால் பிரபஞ்சப்பற்று கழிக்கப்படும். இப்பிரபஞ்சப்பற்று மீளவும் வாசனையால் வந்து தாக்காதிருத்தற் பொருட்டே முத்திபஞ்சாக்கரம் விதிப்படி உச்சரிக்கப்படும் என்ப. இவ்வழியால் ஆன்மா, தத்துவங்களைப் படியாகக்கொண்டு மேலோங்கும். "முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய் - ஒப்பிலா ஆனந்தத்து உள்ளொளி புக்கு" என்பது திருமந்திரம். பாச ஞானமாகிய கருவிஞானம் அசத்து ஆதலால், அது சிவத்தை அறியாது.

2. பசுஞானம்: அந்தக்கரணங்கள் யாவும் கருவிகளே அன்றி அவை ஆன்மா அல்ல. இக்கருவிகளின் துணைகொண்டு ஒருபொருளை அறிவது ஆன்மாவாகும். அங்ஙனம் அறியும்போது மேற்சொல்லப்பட்ட கருவிகள் ஆன்மாவோடு ஒன்றுபட்டு நிற்கும். என்றாலும் அறிவது ஆன்மாவே. விளக்கைக் கருவியாகக்கொண்டு கண் ஒருபொருளை அறிவதுபோல இது நிகழும்.

கண் ஒருபொருளைக் காணினும் விளக்கு கண்ணின் வேறு நிற்பதேயாகும். கண்ணுக்கும் விளக்குக்கும் எப்படியோ அப்படியே உள்ளது ஆன்ம அறிவுக்கும் கண்ணுக்கும் உள்ள உறவு. ஆன்ம அறிவு கூடாமல் கண் அறியாது. ஆதலால், அறிவது கண்ணன்று; ஆன்மாவே ஆம். கண் கருவியேயாம். எனவே அந்தக்கரணங்கள் உயிருக்குக் கருவியால் வேறு நிற்பன என்று அறிந்து அதனின் நீங்கிநின்று இக்கருவியின் துணைகொண்டறியும் கருத்தாவின் உண்மை

எது என்று ஆராயும் அறிவே பசுஞானம் எனப்படும். இந்த ஞானம் ஆன்ம சொரூபத்தைக் காண்பிக்கும். இதுவே தம்மை அறியும் முறையாம். இது பதி ஞானம் எனப்படுவதாகிய தலைவனை அறியும் அறிவு வாய்ப்புக்குத் துணையாய் நிற்பதாகும். ஆகவே, நாம் அந்தக்கரணங்களைக் கருவிகள் என அறிதலே பசு ஞானமாம். இப்பசுஞானமுடைய ஆன்மா, பிரபஞ் சங்களனைத்தும் தனக்குக் கீழானவை என அறித லுறும். அங்ஙனம் அறியும்போது, தானே சிவம் எனவும், தான் சிவனை ஒப்பது எனவும் செருக்கடை யும். இங்ஙனம், பாசம் நீங்கியபின்னும் தன்னையே மதிப்பதுபற்றி இவ்வறிவு பசுஞானம் எனப்பட்டது.

ஆன்மா தூலம் சூக்குமம் காரணம் எனப்படும் தேகங்களால் கட்டுப்பட்டுள்ளது; நூலுணர்வால் உணர்த்த உணர்கிறது; ஒவ்வோரிந்திரியங்கொண்டு ஒவ்வொன்ருக உணர்கிறது. இது சிற்றறிவு எனப் படும். இச்சிற்றறிவு நீங்கப்பெற்று, அங்ஙனம் நீங்கப் பெற்றது இறைவனுல் எனத் தெரிதல்வேண்டும். இன்றேல் ஆன்மா, செருக்குற்றறிதலே உடைய தாகும். இந்தச் செருக்கறிவு ஆன்மாவைச் சடுதியில் மயக்குகின்றது. இம்மயக்கத்தை நீக்கிப் பதியுணர்த்த நாம் உணர்கிரும் என்று ஆன்மா கருதவேண்டும். அதாவது, கரணங்கடந்தபோது பதியில் அழுந்த வேண்டும். அங்ஙனம் அழுந்தாவிடில் ஆன்மா, திரும் பவும் பாசத்திலே கூடிவிடும். ஏனெனில், ஆன்மா ஏதேனும் ஒன்றைச் சார்ந்தே நிற்பதன்றித் தனித்து நில்லாது. அப்படி நிற்பதாக எண்ணின் அதுவே பசுஞானமாம். இது பசுத்துவவாதனை எனவும்படும். இதனுல், ஆன்மா, பாசத்தடை இறையருளால்

நீங்கப்பெறினும் ஆதிமுத்தன் எனப்படுதலே அன்றி இறைவனைப்போன்ற அநாதிமுத்தன் எனப்படுதல் இல்லை என்க. ஒன்றை ஆன்மாவானது அறிந்தேன் என்றும், யான் அறிந்திலேன் என்றும் தன்னையே கருத்தாவாக மதித்தலே பசுவிளக்கம் ஆகும். இதனைக் கருவிவாயிலாக உணரின் பாசவிளக்கம் ஆகும். சுருங்கக்கூறின், தற்போதமுனைப்பால் ஆன்மாவினிடத்தில் நிகழும் ஞானமே பசுஞானமாம் என்க! இப் பசுஞான விபரீதங்களை நம் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் தம்மீது ஏற்றி நம்மீது கருணைகொண்டு கூறியிருக்கும் இடங்கள் பல. ஒருசில வாசகங்களை இங்கே காணலாம்.

'' இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்கு ''

'' தனைச்சிறிதும் நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை ''

'' கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை ''

'' பேதைகுணம் பிறருருவம் யானெனதென் உரை ''

'' அளவில்லாப் பாவகத்தால் அமுக்குண்டு இங்கு
அறிவின்றி. . . .கிடப்பேனுக்கு ''

'' நாத்திகம் பேசி நாத்தழும் பேறி ''

'' இருகை யானையை ஒத்திருந்து என்உளக்
கருவையான் கண்டிலேன் ''

இன்னோரன்ன வாசகங்கள் பசுபோத இயல்புகளை நமக்கு நன்கு நினைப்பூட்டும்தகையவாம்.

3. பதிஞானம்: குருவருளால், அவருரைவழி உறைத்து நிற்பதால் இப்பதிஞானம் வரும். புவன

போகங்களையெல்லாம் கக்கினசோற்றை வெறுப்பது போல வெறுக்கவேண்டும். சுவரைக் காணவேண்டின் அதன்மீது தீட்டியுள்ள சித்திரம் காணப்படாதது போலவே, அறுவகை அத்துவாவுட்பட்ட பிரபஞ்சம், மாயையாகிய காரணரூபத்தில் ஒடுங்கியிருக்கும்போது காணப்படாதாதலால், முழுப்பொய் எனக் கொள்ள வேண்டும். இவ்வித நிர்விகற்பமான காட்சி சலியாம லிருக்கப் பெறவேண்டும். அப்போது ஞானசொரூபம் அறிவினிடம் விளங்கித் தோன்றலுறும். இது பிரபஞ் சத்தின் மேம்பட்டது. மேல்கீழ் இல்லாதது. குறித் தறிவதொரு குணம் இல்லாதது. பிரபஞ்சநாட்டக் காரர்களால் உணரப்படாத இயல்புடையது. இத் தகைய அறிவுதயத்தே, வறியார்க்குப்புதையல் அகப் பட்டாற்போல ஒரு பெருங்காதல் முறுகி வளரும். அப்போது அந்த அன்பே வழியாகச் சிவபிரான் புகுந்து உயிரினிடமாக இனிப்பன். இதுவே பதிஞான அநுபவமாம். பதிஞானத்தின் இயல்பு எல்லாப் பொருளையும் ஒருசேர அறிதலாம். "ஒன்றாகச் சிவனியல்பில் உணர்ந்திடுவன் காணே" என்பது சித்தியார்வாக்கு. ஆன்மா பதியினுள்ளடங்க, அப் பதிவாயிலாய் நிகழும் ஞானமே பதிஞானம் ஆகும். இதனை முற்றறிவு என்பர். இதனையே சிவஞானம் எனவும் சிவபோதம் எனவும் செப்புவர்.

பதிஞானமானது, குற்றங்களில்லாமல் தானே பிரகாசிப்பது. தன்னையும், ஆன்மாவையும் அவ் வான்மாவுக்குப் பிரகாசப்படுத்துவது. எல்லாப் பொருளையும் இனிது விளக்குவது. சிவஞானத்தைச் சிவன் எனவும் கூறுவதுண்டு. பதிஞானமே உண்மை ஞானமாம். ஞானமே முத்திக்குச் சிறந்த சாதனம்

என்பதே உணர்ந்தோர் கூற்று. தெளிதலும் நிட்டை கூடலுமே உண்மைஞானம் எனப்படும். இதுவே முதல்வன் திருவடியை அடையச் செய்வதாகும். இப் பதிஞானம், பதியின் அருளால் ஆன்மாவினிடத்து நிகழ்வது எனத்தெரிதல் நன்று. சாயுச்சியமுத்தி என்பது இத்தகையதான பதிஞானத்தின் முடிந்த பயனும். பதியருளால் இது விளைவது என்பதை,

> "கொடுமா நரகத்து அழுந்தாமே
> காத்தாட் கொள்ளும் குருமணியே"

என ஆனந்தமாலையில் நம் சுவாமிகள் அருளிச்செய் தலால் அறியலாகும். மற்றும், அற்புதப்பத்துள்,

> "இறைவன் எம்பிரான் எல்லையில்லாததன்
> இணைமலர்க் கழல்காட்டி
> அறிவு தந்து எனை ஆண்டுகொண்டருளிய
> அற்புதம்"

எனத் திருவாசகமிடுதலாலும் அறியலாகும். பாச ஞானம் தானென வேறன்மையாவது; பசுஞானம் தனக்கெனச் சுதந்தரமுடையதன்று; ஆகவே, பதி ஞானமே சுதந்தரஞானம் எனப்படும் என்ப. இவ்வா றன பதிஞானத்தை எய்தி, அதிலே நிலைப்புற்று அவ்வநுபவரசங்களைப் பலபடியாக, அழுதுதேடுதல், தேடி அடைதல், அடைந்து அழுந்துதல் என்னும் முறையில் எட்டாம் திருமுறைப் பனுவலை நம் சுவாமி கள் அருளிச்செய்துள்ளாராவர் என்பதுண்மையாம்.

## உண்மைத்தவநெறிப்படிமுறை :

உயிருக்கு உள்ள குற்றம் மலமுடைமை; குணம் அறிவுடைமை. இவ்வறிவு பலவகைப்படினும் மூவகை யாய் இயலும் என்பது மேற்கூறப்பட்டது. அறிவை

அடைதற்காக ஆன்மா அது அதுவாய் நின்றறியும். அதாவது, சத்து அசத்து என்னும் இரண்டினையும் ஒன்றைவிட்டு ஒன்றைச் சாரும். சத்தைச்சாரின் சத்தை அறியும். அசத்தைச் சாரின் அசத்தை அறியும். ஆன்மாவுக்கு நீங்கவேண்டுவது அசத்தியல். ஓங்கவேண்டுவது சத்தியல். இறைவன் உள்ள அன்றே தானும் உள்ள நித்தியப் பொருளாவது ஆன்மா. ஆதலால், எவ்வாற்றானும் அஞ்ஞானம் நீங்கி ஞானம் அடையும் முயற்சியே ஆன்மாவுக்குத் தேவை. இம்முயற்சியின் பயனாகத் தத்துவஞானம் வந்தடையும்.

தத்துவஞானம் தவத்தின் விளைவாகும். வேள்வி முதலியனவும் தவம் எனக் கூறப்பட்டாலும் அவை நிலைத்தலில்லாத சுவர்க்க இன்பம் முதலிய காமியப் பயன்களைத் தருமேயன்றித் தத்துவ ஞானத்தைத் தரமாட்டா. ஆகையால், இவ்வகையான காமியப் பயனளிக்கும் தவம்புரிவோரைப் பசிக்கு உணவு அருந்தியும், பின்னும் பசிதோன்றப் பெறுவோருக்கு ஒப்பிட்டுக் கூறுவர். ஆதலால், இறப்பில் தவமே புரியவேண்டுவது ஆம். இறப்பில் தவம் என்பது சரியையாதிகளாம். அமிழ்தம் உண்பது, பசியை நீக்குதலோடு நரைதிரைகளையும் நீக்குவதுபோல இறப்பில்தவம் என்பது, சாலோகாதி பலன்களையும் தந்து, பின்னர் ஞானத்தையும் தரும். "தானமியாகம் தீர்த்தம்" என்னும் சிவஞானசித்தியார்ச் செய்யுள் இக்கருத்துரைப்பதைக் காணலாம்.

இருவினை ஒப்புணர்வுகொண்டு சரியை கிரியை யோகம் எனப்படும் உண்மைத் தவத்தைப் புரிந்து

அவை முற்றப்பெற்றல் மலபரிபாகமும் சத்திநிபாத மும்தோன்றிக் குருவெளிப்பாடு ஆன்மாவுக்கு நிகழும். ஞானத்தை அடையவிரும்பும் உயிருக்குச் சரியை யாதி மூன்றும் ஞானத்தைத் தரவல்ல படிமுறைக ளாகும். இம்மூன்றுவகைத் தவநெறியை ஆன்மா புரிந்துவருகையில், முதல்வன் உள்நின்று உணர்த்தி வருவன். சத்திநிபாதவிளைவிலே உண்மைஞானத்தை அறிவித்தற்பொருட்டு மேற்கூறியவண்ணம் உள் நின்றுணர்த்திவந்த பரம்பொருள் குருவடிவாய் (அரு ளுருவாய்) எழுந்தருளி வெளிப்பட்டுக் காட்சிதந்து பக்குவமுறுவித்து உண்மைஞானத்தை உணர்த்தி யருளும்.

இதுகாறும் கூறிய அதனல், நல்லொழுக்கமே தவத்துக்கு அடிப்படை என்றும், காமியப்பயனளிக் கும் வேள்வியாதியதவம் சிறப்புடையதன்று என்றும், உண்மைஞானத்தைப் பயப்பதே சிறப்புடைய தவம் என்றும், சரியையாதி மூன்றையும்செய்து ஞானத்திற் சென்றடைவதே சிறந்த தவநெறி என்றும், அதன் வழியே முத்தியை அடைவதே (சிவசாயுச்சியத்தை அடையப்பெறுவதே)நன்னெறி எனப்படும் முடிவான தவநெறி என்றும் நாம் அறிதல் தக்கது.

சிவபோதவாழ்வு நெறி எனக் கூறப்படும் சிறப் புடையது இச்செந்நெறியேயாகும். வேதங்களும் உப நிடதங்களும் முதற்பொருளையும் அதனை அடையும் நெறியையும் வெவ்வேறு வகையாற்கூறினும், அவை கூறும் முதற்பொருள் சிவமே எனவும், அதனை அணையும்நெறி ஞானமார்க்கமே எனவும், இதுவே ஆகமங்கள் முத்தி பஞ்சாக்கர நெறியாக எடுத்து

உரைப்பது எனவும், இதனை மயக்கமற உணர்த்துவதே சிவஞானபோதசாத்திர இயல்பு எனவும் நாம் தெரிதல் இன்றியமையாதாகும்.

வேதங்கள் கூறும் முதற்பொருள் சிவமே என்பதை, "நமோருத்ரமன்யவே" என ருக்வேதமும், "நமஸ்தே ருத்ரமன்யவே" என எசுர்வேதமும், "ருத்ராயதே நமா" எனச் சாமவேதமும், "ருத்ராயஸ்த ருத்யா" என அதர்வண வேதமும் முழக்குவதனால் தெரியலாம். மற்றும், முறையே இம்மறைகளினிடமான ஐதரீய உபநிஷத் "ப்ரக்ஞானம் பிரம்மம்" என்றும், தைத்ரியம் "அகம்பிரம்மாஸ்மி" என்றும், சாந்தோக்யம் "தத்வமஸி" என்றும், மாண்டூக்யம் "ஆத்மா பிரம்மம்" என்றும் பகரும் வாக்கியங்கள் யாவும் ஞானநெறியையே எடுத்துரைக்கின்றன எனவும் அறிஞர் கொள்ளுவர். இத்திறங்கள் யாவும், பஞ்சாக்கரத்துவழியே சாத்திரங்களால் உணர்த்தப் படுகின்றனவாகும். இவற்றாலெல்லாம் நாம், ஞானத்தையின்றி மோக்ஷம் சித்தியாது என்ற சித்தாந்தத்துக்கு வந்தே தீரவேண்டும் என்பது உறுதியாம்.

சரியைநெறி :

எடுத்த பிறப்பிலே முத்தி அடைய விரும்புபவர்க்குச் சைவநெறியாகிய சரியை முதலனவே தக்கனவாம். இவற்றின் பயன் பதமுத்தி, பரமுத்தி என்பனவாம். இவற்றுள் பதமுத்தி படிப்படியேசெல்லும் பாதையாம். பரமுத்தியே முடிவான சாயுச்சியமாம். ஆகவே, சிவபெருமான் திருவடியை அடைவதற்குச் சைவநன்னெறி நான்கு மார்க்கங்களை வகுத்துள்ளது.

அவை, தாதமார்க்கம் - சற்புத்திர மார்க்கம் - தோழ மார்க்கம் — சன்மார்க்கம் எனப்படும். இவைகளை முறையே சிவசரியை - சிவகிரியை - சிவயோகம் - சிவ ஞானம் எனவும் வழங்குவர். இம்மார்க்கங்களின் பயன் முறையே சிவசாலோகம் - சிவசாமீபம் - சிவசாரூபம் - சிவசாயுச்சியம் என்பனவாம். இவற்றுள் முன்னவை மூன்றையும் அபரமுத்தி என்பர். பின்னதை உயர் வுடையதான பரமுத்தி என்பர்.

பொதுவாக இம்மார்க்கங்கள் நான்கினையும் சிவ புண்ணியத் தவநெறி என்னலாம். இந்த நெறியினை மேற்கொள்ளுவோர், இதிற் செல்லுதற்குத் தம்மைத் தகுதியுள்ளவராக்குதற்கேற்ற தீக்கைகளை முறையே பெறவேண்டும். படிப்பும் திறமையுமற்றவர்பால் ஒரு சிறந்த பதவியை ஒப்படைத்தால் அப்பதவி அவர் களால் நன்கு நிருவகிக்கப்படாது கெடும். வயது வராத குழந்தையிடம் பெரிய ஆஸ்தியை ஒப்படைத் தால் அதன் பெருமையையும், அதனைப் பேணும் முறைமையையும் அறியாத அக்குழந்தை அதனால் பயனடைய முடியாமற்போம். ஆதலால், தீட்சையின் முக்கியத்துவத்தை நாம் நன்குதெரிந்து அதனை உரிய முறையில்அடைந்தொழுகுதலே நலம் பெரிது நல்கும். இதனைச் சர்வக்ஞானோத்திரம், “தத்துவத்தின் தளைப் படுகின்றவன் - எத்திறத்த தருமம் இசையினும் - சித்த நற்சிவ தீக்கையி னலலால் - மெய்த்துகட்டு விடுப்பது வேறிலை” என்றுரைப்பதால் அறியலாம்.

தீக்கை இன்னவித பயனளிப்பது என்பதை, மதங்கசூத்திரம் “செப்பரிதாகிய தீக்கை மாமொழி - மெய்ப்பொருள் மலவலி விடக் கெடுப்பதும் - ஒப்பறு

ஞானநல் குவதும் என்னுமால் - அப்பரன் அருளிய ஆகமங்களே" என்பதனாலும் தெரிதரலாகும்.

மேற்கூறிவரப்பட்ட சரியை முதலன உபாயம் எனவும் உண்மை எனவும் இரண்டு வகைப்பட்டு நடக்கும். உபாயம் எனப்படுவது, உலகப் பொருளைக் கருதிச் செய்வதாகும். உண்மை எனப்படுவது முத்தி காரணமாகச் செய்யப்படுவதாகும். ஆகவே, மேற் கூறப்பட்ட சரியைமுதலிய நான்கும், முத்தியைநாடிச் செய்யப்படும் உண்மைச்சிவபுண்ணியம் என்றும் - உலகப்பொருளை நாடிச் செய்யப்படும் உபாயச் சிவ புண்ணியம் என்றும் இருவகைப்பட்டுப் பின்னர் ஒவ் வொன்றும் நான்கு நான்காவதால் சிவபுண்ணியம் எட்டுவகைப்படும் என்பது காணலாம். இந்த எட்டும், சரியையிற் சரியை - கிரியை - யோகம் - ஞானம் என்ற வகையுடையவாகப் பகுக்கப்பட்டு முப்பத்திரண்டாய் விரியும் என்பதும் அறியலாம். இவ் ஒவ்வொன்றின் விவரத்தையும் ஆகமாதி நூல்களால் பரக்க அறிய லாகும். ஆகவே, சரியை முதலிய நான்கினைப்பற்றிப் பொதுவகையான விவரம் இங்கே தரப்படுகின்றது.

**சரியைத்தவநெறி :**

சரியை நெறியானது தாதமார்க்கம் எனப்படும். இந்நெறி மேற்கொள்வோர், சிவாலயத்தே, சிவபிரான் திருமேனி கொண்டிருத்தலினாலே, வரகுணபாண்டிய தேவர், திருவிடைமருதூர்த் திருக்கோவிலில் நாய்க் கட்டம் நீக்கித் தூய்மை செய்தருளினாற்போல, அசுத் தம்போக்கித் திருமெழுக்கிட்டும், திருவிளக்கிட்டும், நந்தவனங்கள் வைத்தும், மலர்மாலைகள் தொடுத்தும்

சிவபிரான் திருமேனிக்குச் சாத்த உதவி, அப் பெருமானை வாயார வாழ்த்திச் சிவனடியார்க்குத் தொண்டுகள் பரிவொடுபுரிந்து அவரது ஏவல்வழி நின்று, இந்திரியத் தொழிலாகிய புறத்தொழில்மாத் திரையால் சிவபெருமான் உருவத் திருமேனியை வழி பட்டு வருதல் ஆகும். இதனை மேற்கொண்டோர், சிவசாலோகபதவியினை எய்துவர். பெண்பாலரில் திலகவதி யம்மையார் இங்ஙனம் திருவதிகைப்பதி யிலே திருத்தொண்டாற்றியமை சேக்கிழார்பெருமா னால் பாராட்டப்படுகின்றமை காணலாம்.

மற்றும், திருநாவுக்கரசுசுவாமிகள் இத்தொண் டினை நம்மனோர் அறியும்பொருட்டுத் தாமே மேற் கொண்டு ஒழுகிக்காட்டியுள்ளமை அறிந்த செய்தி யாகும். அச்சுவாமிகள் அருளிச்செய்துள்ள நான்காம் திருமுறையின் முதற்சுருதியே இம்மார்க்கத்தை மேற் கொண்டொழுகும்படி யாவர்க்கும் ஆணையிடுகின்ற தென்னலாம். "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்ற முகப்புடையது மேற்குறிப்பிடப்பட்ட தேவாரம். இத் தேவாரத்திலே, இறைவன் ஆன்மாக்களிடம் பிரி வின்றி நிற்கின்றான் என்பதும், அவனே ஆன்மாக் களின் மலத்தை (ஆணவத்தை)த் திருவருள்கூர்ந்து நீக்கி உயிர்களைச் சுத்தம் செய்கிறான் என்பதும், அவனைப் பிரியாது இரவும் பகலும் வணங்கிக் கிடக்க வேண்டுவது ஆன்மாக்களின் கடமை என்பதும் உணர்த்தப்பட்டிருத்தல் காணலாம். இங்ஙனம், சரியையில் நிற்போரை - ஒரு நோயாளியை மணி, மந்திர, ஔடதங்கள் என்னும் மூன்றாலும் நோய் போக்கிச் சுகஞ்செய்வதுபோலத் - தலம், தீர்த்தம், மூர்த்தி என்னும் மூன்றாலும் இறைவன் சுகநிலைக்கு

அருகதையாக்குகிறுன் என்பதை அதிகை - கடிலம் - வீரட்டானத்துறை யம்மான் என்னும் சொற்கள் நின்றுணர்த்தலால் அறியலாம். இதுவே சிவசாலோகக் குறிப்புடையதென்க! இங்ஙனம் நம் உடம்புள் உறையும் உயிரைச் சுத்தஞ்செய்துதவும் இறைவற்கு, நாமும் அவனுறையும் திருக்கோயிலைச் சுத்தஞ்செய்துதவுதல் வேண்டுமென்பது நன்றியறிவாளர் எவர்க்கும் நீதியெனவே படும் அன்றே! "ஞானத்தால் தொழுவேன் உனை நானலேன்" எனவும், "எழுபிறப்பும் உனக்கு ஆட்செய்கின்றேன்" எனவும், நம் ஆளுடைஅரசர் மீட்டும் திருவாய்மலர்ந்திருத்தல் கொண்டும் நாம் இச்சரியை நெறியினை அறியலாகும். "தாதமார்க்கம் சாற்றின்" என்னும் சித்தியார்ப் பாடலும், "நிலைபெறுமாறு எண்ணுதியேல்" என்னும் தாண்டகவாக்கும் இங்கு ஓதிப்பார்த்தல் நன்றும்.

மேலும், பொதுப்பட்டமுறையில் கூறப்படும் இச் சரியைநெறிதானும், சரியையிற் சரியை - சரியையிற் கிரியை - சரியையில் யோகம் - சரியையில் ஞானம் - என நான்கு படிநிலைகளை உடையதாகும். திருக்கோவிலைத் தூய்மைசெய்தலாதியன சரியையில் சரியை ஆம். பரிவாரமூர்த்திகளில் ஒருமூர்த்தியை வழிபடுதல் சரியையிற் கிரியை என்பர். நெஞ்சிலே, சிவபெருமான் உருவத் திருமேனியைத் தியானஞ்செய்தல் சரியையில் யோகம் எனப்படும். மேற்சொல்லப்பட்ட தியான பாவனையால் ஏற்படும் உணர்ச்சி யநுபவநிலையே சரியையில் ஞானமாம். வாதுளாகமத்தில், "புறந்திகழ் இலக்கில் மூன்றும்பெறில் புறப்பூசையாமே" என்று கூறப்பட்டிருத்தல் இங்குக் கருதுதல் தக்கதாம்.

திருநாவுக்கரசுசுவாமிகள் முதலிய நால்வருமே ஞானு நுஷ்டிதர்களாவர். எனினும், ஒவ்வொருவரும் நம்ம ஞேர்க்கு ஒவ்வொருநெறியினைத் தமக்காக அல்லாமல் நமக்காக மேற்கொண்டொழுகிக் காட்டியுள்ளனர் எனக்கோடலே பொருந்துவதாகும். "உடம்பெனும் மனையகத்து" "காயமே கோயிலாக" முதலியவாகிய இந்நாயனுரே அருளிச்செய்துள்ள தேவாரங்கள் இக் கருத்தைப் புலப்படுத்த வல்லனவாகும். ஆதலின், சரியைத்தவநெறிக்குநாம் ஆளுடைஅரசர்கையாண்ட முறையைச் சான்ருகக் கொண்டொழுகுதலே சாலும். சரியைக்குச் சமயதீக்கை உரியது என்பர்.

## கிரியைத்தவநெறி :

கிரியை நெறியானது புத்திரமார்க்கம் எனவும் புகலப்படும். கிரியை, யோகநெறிகளில் நிற்பவர்க்கு விசேட தீக்கை உரியதாகும். இனிக் கிரியை நெறியினைக் கைக்கொள்ளுபவர்கள், மலர்முதல் திருவமுது ஈருகப் பூஜைக்குரியன அமைத்துக் கொள்ளவேண்டும். பூதசுத்தி முதலாக ஐவகைச் சுத்திசெய்தல் வேண்டும். சிவாசனமூர்த்தி மூலமந்திரங்களினுல் ஆசனமிடவேண்டும். அதில் மூர்த்தியை எழுந்தருளச்செய்யவேண்டும். அம்மூர்த்தியில் மூர்த்திமானுகிய சிவபெருமானைப் பாவனைசெய்து வெளிப்படுத்தவேண்டும். பிறகு நின்மலமான மெய்யன்பினுல் அருச்சனை செய்யவேண்டும். பின்னர் விருப்புடன் துதிகூறி நமஸ்கரித்து வழிபாடு புரியவேண்டும். அப்பால் நித்தியாக்கினி காரியம் செய்து முடிக்க வேண்டும். எனவே, கிரியை நெறியை நோக்கினுல், இது இந்திரியங்களும் மனமும்கூடித் தொழிற்படுவது

தெரியவரும். இதில் புறத்தொழில் அகத்தொழில் என்ற இரண்டும் நிகழ்கின்றன. இது சிவபெருமானுடைய அருவுருவத் திருமேனியை வழிபடுவதாகும். இப்பூசனைக்குப் பயன் சிவசாமீப்பிய முத்தியாம். இதுவும் பதமுத்தியின்பாற்படுவதே.

இனி, இக்கிரியையின் நான்கு பாதங்களுள், கிரியையிற் சரியையே சிவபூசைக்கு வேண்டுவன சேகரித்தல் ஆகும். கிரியையிற் கிரியையே, பூதசுத்தி முதலிய ஐவகைச் சுத்திசெய்து சிவலிங்கவடிவிற் செய்யும் பூசனை எனப்படும். கிரியையில் யோகம் எனப்படுவது, அகத்தே பூசைக்கு இதயமும், ஓமத்துக்கு நாபியும், தியானத்துக்குப் புருவநடுவுமாக வகுத்துக்கொண்டு அந்தரியாகபூசை செய்தலாம். இதனால் உள்ளும் புறம்பும் ஒத்து நடத்தப்படுதல் காணலாம். கிரியையில் ஞானமாவது, மேற்சொல்லப்பட்ட அந்தரியாக பூசையின் உறைப்பால் பேருணர்வநுபவம் நிகழப்பெறுதலாம். இதன்பயன் சிவசாமீபமாகிய பதமுத்தியாம் என்பர்.

திருஞானசம்பந்தசுவாமிகள் சிவபெருமானைத் தம் தந்தையாகவே கருதியொழுகிக் காட்டியமை யாவரும் அறிவர். சிவபெருமானும், ஒருதந்தை மைந்தனிடம் பரிவுசெய்யும் முறையிலேயே அருள் புரிந்தமை தெரிந்த செய்தியாம். இவரது திருக்கடைக்காப்பு முதல்திருமுறை முதலிலே உள்ளது "தோடுடைய செவியன்" என்னும் சுருதி. இச்சுவாமிகள் நம்மனோர் உய்யுமாறு திருவாய்மலர்ந்தருளியதேயன்றித் திருக்கரத்துத் திருவிரலாலும் சுட்டிக் காட்டியுள்ளார் என்பது புராணவுரை. இத்திருக்கடைக்காப்பிலே,

கிரியை நெறியானது, அகமும் புறமும் ஒன்றி வழி பாடு செய்யும் தகைமை வாய்ந்தது என்பதைத் "தோடுடையசெவியன்" "என்உள்ளம் கவர்கள்வன்" என்றுள்ள இடங்கள் உணர்த்த வல்லனவாம். புறத்தே அருச்சனையாதி நிகழ்த்துதலை "ஏடுடைய மலரால்(ன்)...பணிந்து ஏத்த" என்ற இடம் உணர்த் தும். குருவாகி ஞானத்தை உதவுபவர் சிவமே என்பதைப் "பெம்மான் இவன் அன்றே" என்னு மிடம் உணர்த்தும். இக்கிரியா பூசனையை இவ் ஆளுடைய பிள்ளையார், "சித்தம் தெளிவீர்காள்! அத்தன் ஆரூரைப் பத்திமலர்தூவ முத்தி ஆகும்மே" எனத் தெளிவாய்த் தெரிவித்திருத்தலாலும் அறிய லாம். மற்றும், இக்கிரியைநெறி புத்திரமார்க்கமா வதை, "திருவாவடுதுறையுள் அப்பனே எனை அஞ்சல் என்றருளாய் யார் எனக்குறவு?" என்றும், "இதுவோ எமை ஆளுமாறு ஈவது ஒன்று இல்லை யேல்" என்றும் இச்சுவாமிகள் அருளிச் செய்திருத் தல் கொண்டு கருதலாகும். இவரும் ஞானத்தின் திருவுருவாவர் என்றாலும், நமக்காகத் தாமே கிரியா மார்க்கத்தை அநுட்டித்துக் காட்டியுள்ள ஆசாரிய ராவர் என்று கோடலே தக்கதாகும். "புத்திர மார்க்கம் புகலின்" என்ற சித்தியார்ப்பாடல் இங்குக் காண்டல் நன்றாம்.

## யோகத்தவநெறி :

யோகநெறியைத் தோழநெறி என்றும் சொல் லுவர். விசேடதீக்கையே இதை மேற்கோடற்கும் அமையும். இதன் பயன் சிவசாரூபம் என்ப. இனி, யோகநெறிப் பயிற்சியாவது, கீழ்நோக்கிச் செல்லும்

வாயுவையும் மேல்நோக்கிச் செல்லும் வாயுவையும் அடக்கிச் சுழுமுனைவழியே உயிர்வளியை (பிராண வாயுவை) ஏறச்செலுத்தி நிறுத்தி, மனத்தை விடயங்களை எண்ணாதபடி திருப்பவேண்டும். அப்பால், முக்கோணம் சதுரம் முதலான அடையாளங்களை உடைய மூலாதாரம் சுவாதிட்டானம் முதலிய ஆறு ஆதாரங்களிலுமுள்ள உயிரும் மெய்யுமாகிய இருவகை அக்ஷரங்களின் ஒழுங்கையும் உணர்ந்து, அந்த அந்த ஆதார அதிதேவதைகளைத் தியானிக்கவேண்டும். ஆறு ஆதாரங்களிலும் சிவனை வெளிப்படுத்துவதாக நிற்கும் அசபாசத்தி சிவசொரூபமாய் நிற்கும் முறையை நோக்கவேண்டும். மூலாதாரம் முதல் விநாயகர் முதலான தேவதைகளைப் பொருந்தி, மேலான பிரமரந்திரம்வரையில் அந்த அசபையுடனே சென்று அணையவேண்டும். அப்பால் பிரமரந்திரத் தாமரைமுகை மலரும். அதன் தாதுக்களின் முடியிலுள்ள சந்திரமண்டலத்தை மூலாக்கினியால் இளகப் பண்ணவேண்டும். அந்த மண்டலவழியாக ஒழுகும் அமுதத்தைத் தேகமுழுதும் நிரப்பவேண்டும். அப்பால் பூரணப்பிரகாசத்தையே தியானித்தல் நிகழும். இதனால் வினைகள் கெடும். இதனை இயமம் முதலிய பொருந்தின அட்டாங்கயோகம் எனவும் கூறுவர். இது அகத்தொழில்மாத்திரமேகொண்டு சிவபெருமானுடைய அருவத்திருமேனியிடத்தே நிகழ்வது ஆகும். இதனைமுழுதும் மேற்கொண்டொழுகினோர் சிவசாரூபம் பெறுவர்.

வாயுவை அடக்குவதென்பது ரேசக, பூரக, கும்பகப் பயிற்சியாம். வெளியே செல்லும் மூச்சினை இரேசகம் என்பர். இது, மேல்நோக்கிச்செல்லும் வாயு

எனப்படும். இதனை நிசுவாசம் என்பர். உள்ளே போகும்மூச்சு பூரகம் ஆம். இது கீழ்நோக்கிச்செல்லும் வாயுவாம். இதனை உசுவாசம் என்பர். இவ்விரு மூச்சுக்களையும் இவ்வாறு தம்மியல்பிலே செல்லவிடாமல்தடுத்து அடக்குதல் கும்பகம் ஆம். அப்போது சுழுமுனை நாடி வழிவிடும். அக்காலை, மனத்தையும் மேற்சொல்லப்பட்ட சுழுமுனைவழி யேறிய வாயுவையும் ஒன்றுகூட்டினால் உள்ளம் ஓடாமல் நிலைக்கும். இதனை, "வாயுநிற்ப மனம்நிற்கும்" என்பர் பெரியோர். வாயுவை நிறுத்துவதால் மனம் நிற்பதை, வெள்ளத்தை ஓடாமல் நிறுத்தினால் அதில் ஓடிய துரும்பும் நிற்பதாகிய உவமை கூறி விளக்குவர் யோகியர். ஆறுதாரங்களையும் அவற்றின் அக்ஷரங்களையும் அதிதேவதைகளையும் விரிந்த நூல்களால் அறியலாகும். இவ்வாதீனத்து 82 ஆம் வெளியீட்டில் இச்செய்தி சிறிதளவு விவரம் பெற்றுள்ளமை காணலாகும். அசபை என்பது நாதவடிவாக உள்ள குண்டலினி சத்தி சொரூபமாம். அட்டாங்கயோக உறுப்புக்களை யோகநூல்களால் அறிதல் தகும். இந்த அட்டாங்க யோக மேற்கொள்வோர்க்கு இயமம் நியமம் ஆதனம் மூன்றும் அடிப்படை ஒழுக்கமாகும். இதன்மேல் வாயுவை அடக்கல் பிராணாயாமமாம். புலனொடுக்கம் எனப்படும் மனஒடுக்கம் பிரத்தியாகாரமாம். சுழுமுனை ஏற்றமே தாரணை. ஆதார அதிதேவதா அறிவே தியானம். பிரமரந்திரத்தே பரிபூரணப் பிரகாசத் தியானம் இடையறுதுநிகழ்தலேசமாதியாம். அகண்டாகார தியானத்தை நிராதாரயோகம் என்பர்.

இந்தத் தோழநெறியினைச் சுந்தரமூர்த்திசுவாமிகள் வரலாறும் திருப்பாட்டும் உணர்த்தும். இவரது

பிறப்பு, வளர்ச்சி, திருமணம் ஆகியவை இயமம் முதலிய மூன்றைக் குறிப்பாலுணர்த்தும். திருமணப் பந்தரில் சிவமறையோர் உள்ளே புகுதலும், பின்னர் இருவரும் வெளியேறுதலும், சுந்தரர் அந்தணரைத் தகைதலும் இரேசக பூரக கும்பகமாம் பிராணுயாமக் குறிப்புடையன். திருவருட்டுறைச் சவையிற்சேர்ந்து நிற்றல் பிரத்தியாகாரம் தெரிக்கும். சபையோர் நீதி யுரைவழியே செல்லுதல் தாரணையாம். அந்தணக் கோலத்தவரைப் படிப்படியாகச் சிவமெனவே தெரி யப்பெறுதல் தியானமாம். சிவக்காட்சி பெறுதலே சமாதிநிலை ஆயிற்றென்க. இவரது ஏழாந்திருமுறை யின் முதல் திருப்பாடல் "பித்தா பிறைசூடி" என்பது. இத்திருப்பாட்டு ஆன்மா என்றும் அடிமைப்பட்டுக் கிடப்பதை என்ற கொள்கை உணர்த்தும். ஆன்மா வின் அறியாநிலையைப் "பித்தா" என்றமைபுலப்படுத் தும்; அறிவறிந்த நிலையை "உனக்கு ஆளாய்" என் றமை உணர்த்தும். இந்த யோகநெறியானது முற்றி லும் மனத்தைப் பண்படுத்துவதாக இருத்தலை, "மற வாதே நினைக்கின்றேன் மனத்துன்னை வைத்தாய்" என்ற இடம் தெரியப்படுத்தும். இவ் ஆளுடை நம்பிகளும், தம்பிரான்தோழரே ஆவார் எனினும், நம்மனோர்க்கு, யோகநெறியினைப் புலப்படச் செய்தற் கான முறையிலே தாம் ஒழுகியும் ஓதியும் அறியச் செய்துள்ளமை காணத்தக்கது.

இப்பால், யோகத்துச் சரியை எனப்படுவது இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம் என்ற நான் கினைப் பழகுதலாம். யோகத்திற் கிரியையாவது, பிரத்தியாகாரம் தாரணை என்ற இரண்டும் பழகுத லாம். யோகத்தில்யோகம் எனப்படுவது தியானமாம்.

யோகத்தில் ஞானம் சமாதிகூடுதலாகும். சிவலிங்காதி வடிவுபற்றி இந்த யோகம் நிகழுமேல் அது சாலம்பயோகம் எனப்படும்; அகண்டாகார சோதி பற்றி நிகழுமேல் நிராலம்பயோகம் எனப்படும். இதன் பயன் முன்னரே கூறப்பட்டது. இந்தமார்க்கம் சகமார்க்கம் எனவும் சொல்லப்படும். "சகமார்க்கம்" என்னும் சித்தியார்ப்பாடல் இங்குக் காண்டல் நன்றாம்.

ஞானத்தவநெறி :

இந்த ஞானத்தவநெறியே நான்காவது மார்க்கமாம். நாம் முற்கூறப்பட்ட சரியை முதலான மூன்று மார்க்கங்களையும் மேற்கொண்டு நடந்தால் அவைகள் சோபானமாகி உதவி நம்மை இறுதியதும் இன்றியமையாததுமான ஞானமார்க்கத்திலே கொண்டு சேர்க்கும். இந்த மார்க்கத்துக்குச் சன்மார்க்கம் என்பதும் பெயராம். சன்மார்க்கநெறியாவது யாதெனில், எல்லாக் கலைஞானங்களும், புராணங்களும், வேத சிவாகம கர்மகாண்டச் செய்திகளும், மற்றச் சமயசாத்திரங்களும் ஆராய்ந்து அதன்பயனைப் பல பல விதமாகச் சொல்லுகின்ற அவற்றின் பொருள்களெல்லாம் கீழானவை எனக் கண்டுநீங்கி, பதி, பசு, பாசம் எனப்படும் முப்பொருள் உண்மைதெரிந்து, அவற்றின் தட்டத இலக்கணங்களையும், அவற்றுள் பசு பாசங்களல்லாத பதியின் சொரூப இலக்கணத்தைத் தெரியச்செய்கிற ஞானசாத்திரங்களைத் தானாக ஓதுவதும், ஆசிரியனிடத்துக் கேட்பதும், கேட்டவாறு சிந்திப்பதும், சிந்திக்கையில் காணப்படுகிற காண்பான் (ஞாதுரு), காட்சி (ஞானம்), காணப்படு

பொருள் (ஞேயம்) என்கிற சவிகற்ப ஞான எல்லை யைக்கடந்து, இம்மூன்றும் அற்று அத்துவிதமாய் இயைந்த அகண்டாகார சச்சிதானந்தப் பிழம்பான சிவபெருமானிடம் நிருவிகற்ப ஞானத்தால் வழிபாடு செய்தலாம். இந்த வழிபாடு மேற்கூறப்பட்ட மார்க் கங்கள் போன்று புறத்தொழிலும் அன்று; அகத் தொழிலும் அன்று. இது அறிவுத்தொழில்மாத்திரை யாய் நிகழ்வது ஆகும். இது சிவபெருமானுடைய சொரூபத் திருமேனியிடத்து நிகழ்வதாகும். இதனை மேற்கொண்டோர் சிவசாயுச்சியம் எனப்படும் பரமுத் தியை எய்துவர்.

இப்பரமுத்தி அல்லாத ஏனைப் பதமுத்திகள் அநித்தம் எனப்படும். அநித்தம் என்பது மேலான தன்று எனப் பொருள்படும் சொல்லாம். சுருக்க மாகவும் சற்றுத் தெளிவாகவும் இந்த ஞானமார்க் கத்தை விளக்கினால், எல்லாச் சாத்திரப்பொருள் களையும் உணர்தல் முதற்படியாம் எனவும், அப் பொருள்களையெல்லாம் கீழ் என ஒதுக்குதல் இரண் டாம்படியாம் எனவும், ஞானசாத்திரப் பொருளை நாடுதல் மூன்றும்படியாம் எனவும், சிவபிரான் திரு வடியிலே இரண்டறக் கலத்தல் நான்காம்படியாம் எனவும் கூறலாம்.

இனிச் சிவதருமோத்தரம், சிவனை வழிபடும் முறையினை ஐந்தாக வகுத்துச் சொல்லும். அவை, கன்மயாகம் - தவயாகம் - செபயாகம் - தியானயாகம் - ஞானயாகம் எனப்படும். இவற்றுள் முதலது நித்ய கர்மநெறியாம். இரண்டாமது விரதநெறியாம். மூன்று வது மந்திரம் ஓதுநெறியாகும். நான்காமது மூர்த்தித்

தியானநெறியாம். இவை ஒன்றைவிட ஒன்று சிறந்தவையாகும். இவற்ருல் படிப்படியாகப் பிரபஞ்சப் பற்று நீக்கம் உண்டாகும் என்ருலும், பற்றின் பற்று நீக்கம் உண்டாகாது. ஆகையால் இந்த நான்கும் போகத்தையே (பதமுத்தியையே) பயக்கும் மென்மை உடையனவாகும்.

இப்பால், ஐந்தாமதுவான ஞானயாகம் எனப்படுவது யாது என்பதைக் காண்போம். முதலில், ஞானசாத்திரங்களை முரண்பாடு ஒழிதருமாறு தானே படிக்கவேண்டும். இது செய்வது ஒருவனைச் சாத்திர நெறிக்குத் தகுதியுடையவனுக்கும் அளவுக்கு உதவும். பிறகு, தான்படித்தபடி பக்குவம் உடையவர்க்குப் படிப்பித்தல் செய்யவேண்டும். இதனுல் ஒருவனுக்குத் தான் கற்றநூல் நன்கு பாடமாகும். அப்பால், தான் ஓதியும் ஓதுவித்தும் முயன்ற ஞானசாத்திரத்தின் நன்மையான பொருள்களைத் தனது மதிநுட்பத்தால்ஆராய்ந்து பிறர்க்குச்சொல்லவேண்டும். இதுசெய்தலால், ஒருவற்கு ஆராய்ச்சியறிவு விளையும். இது அநுபவ அறிவு அன்று. வேண்டுவது அநுபவ அறிவே. ஆகையால், அநுபவ அறிவு விளங்கும் பொருட்டு ஞானசாரியனிடத்து அந்தச் சாத்திரப் பொருளை உபதேசமுறையில் கேட்டல் வேண்டும். ஐந்தாவதாகக் கேட்டவாறே குறையற்ற அப்பொருளைத் தனித்திருந்து சிந்தித்தல்வேண்டும். இந்த ஐந்து படிமுறைகளும் ஞானயாகத்தினுக்கு உரியவையாகும். இத்தகைய ஞானயாகமே முத்திதரவல்லது. ஆதலால், முத்தியடைய விரும்புபவர் யாவராயினும் மேம்பட்டதான ஐந்துவகையால் நிகழும் இந்த ஞானயாகத்திலே சிவனை வழிபடவேண்டும். இதில்

தெளிதற்கும் நிட்டைக்கும் ஆசிரியன் உபதேசமே யல்லால் நூல் தேவையில்லை. இதனால் ஞானாசாரியரது சிறந்த நிலையும் சீடனுடைய இயல்பும் நன்கு தெரியப்படும்.

மேற்கூறப்பட்ட ஞானயாகம் ஐந்தனுள், ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தல் என்ற மூன்றும் ஆசிரியனை இல்லாமலும் நிகழும். ஆதலால், ஆசிரியனால் அறிவுறுத்தப்படுகின்ற கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் எனப்படும் நான்குமே உண்மை ஞானம் எனப்படும். இந்த நான்கிலும் பழகி நிட்டை கூடுபவர் வீட்டின்பத்தைத் தட்டாமல் எய்துவர். இந்நான்கினுட்படுதலின்றி ஓதல் முதலாம் மூன்றினை மட்டில் மேற்கொண்டொழுகிச் சரீரம் நீங்கப்பெற்றவர் பதமுத்திகளை எய்தித் திரும்பவும் இறைவன் ஆணைப்படி தக்க சூழ்நிலை வாய்ப்புள் பிறந்து மேற்கூறப்பட்ட நான்கு ஞானநெறியால் நிட்டைமேவி வீடுபேறடைவர். இவ்வுலகில் பிறக்கவேண்டாமலே, சிவலோகத்திலேயே சிவபிரான் குருவாகி உபதேசிக்கக் கேட்டலாதி ஞானம்பெற்று நிட்டைமேவி வீட்டை அடையினும் அடைவர்.

இதுவரை கூறியவதனால், ஞானம் எனப்படுவது ஞானநூல் ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தல் - கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என ஏழுவகைப்படும் என்பதாயிற்று. இவற்றுள் முன்னைய மூன்றும் உண்மை ஞானத்துக்கு ஏதுவாம்; பின்னைய நான்கும் உண்மை ஞானமாம். முன்னது பொதுஞானம்; பின்னது சிறப்புஞானம். முன்னதற்குப் பதமுத்தியே பயன். பின்னதற்குப் பயன் பரமுத்தியாம் என்பர்.

இவையெல்லாம் சிவஞானசித்தியார் நூலில் சாதன வியல் எட்டாம் சூத்திரம் இரண்டாம் அதிகரண விளக்கச் செய்யுட்களால் அறியலாகும்.

இங்குக் கூறப்படும் உண்மைஞானம் தானம் முதலியவற்றுல் விளையாது. தான முதலியவை, பசு புண்ணியம் எனப்பட்டுச் சுவர்க்கபோகமாத்திரமே நல்குந்திறத்தவாம். இவ்வழிச்சென்று மாண்டோர் மீண்டும் பிறத்தல்செய்வர். ஆனால், சரியை முதலாம் மூன்றும் சிவபுண்ணியம் எனப்படும். இந்நெறியில் நிற்போர் இத்தகைய தவத்தால் ஞானநெறி அடையப்பெறுவர். இறந்தோ பிறந்தோ இங்ஙனம் அடைதலும் உண்டு. இவ்வாறன்றி, முதிர்ந்த பத்தியுடையோர், மேற்கூறப்பட்ட தானத்தினைச் சிவஞானியர்க்குச் செய்தலால் முத்தியடைதலும் உண்டு. இங்ஙனம் அளிக்கும் சிறுத்தொண்டராதியான பெருந்தொண்டர்களும், ஏனையோர்களைப்போலக் காலநீட்டிப்பில்லாமல், சரியையாதி மூன்றினையும் எளிதிலும் விரைவிலும் நிறைவேற்றிப் பின் ஞானத்தில் சேர்வர் என்பது இவ்விடத்துக் கருத்தாக நாம் கொள்ள வேண்டும். எவ்வாறெனினும், எவரும், "சரியை கிரியாயோகம் செலுத்திய பின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்" என்பதே நியதியாம் என்க. தீக்கை முதலியனவும் இங்ஙனமே ஞானம் உதிப்பித்தே உற்பவம் துடைக்கும் என்பது நெறியாம். இது பற்றியே "அழிவிலாக் கிரியையினுதல், சத்திமத் தானுதல், அத்துவாசுத்திபண்ணி மலம் அகற்றி, ஒழிவிலாச் சிவம்பிரகாசித்தற்கு ஞானமுதிப்பித்து உற்பவம் துடைப்பன் அரன்" எனக் கூறப்பட்டிருத்தல் தெரியலாகும்.

தொகுத்துக்கூறின், ஞானமார்க்கம் என்பதும் மேலே சொல்லப்பட்ட சரியை முதலியவற்றைப் போலவே நான்குவகைப்படும். அவை, ஞானத்திற் சரியை - ஞானத்திற்கிரியை - ஞானத்தில் யோகம் - ஞானத்தில் ஞானம் என்பனவாம். ஞானத்தில் ஞானமே உண்மையான சாயுச்சியப்பேறு அளிப்பது. பிறமூன்றும், சாலோகம் முதலான பதமுத்தியே பயக்கும். சரியையில் ஞானம் - கிரியையில் ஞானம் - யோகத்தில் ஞானம் எனப்படும் இம்மூன்று ஞானங்கட்கும் பயன் சாயுச்சியம் எனக் கூறப்பட்டாலும், அந்தச் சாயுச்சியம் புவனபதிகளால் அதிட்டிக்கப்பட்டு அந்தப் புவனபதிகள் செய்யும் அதிகாரங்களைப்போலவே செய்துகொண்டு ஆண்டுறைதல் ஆகும் என்பர்.

**கேட்டல்ஞானம்:**

சூரியன் சந்நிதியில் சூரியகாந்தக் கல்லினிடம் நெருப்பு விளங்கித்தோன்றும். இவ்வாறே, ஞான சாத்திரப்பொருளை உபதேசமுறையால் சொல்லும் தகுதிகொண்ட ஞானாசிரியன் திருமுன்னே வந்துற்ற மாணுக்கனுக்குக் கேட்டல் அறிவு விளக்கமுறும். அப்போது, முதல்வனாகிய பதியும் - அப்பதியின் உள்ளே பசுவும் - அப்பசுவினுள்ளே பிரபஞ்சவடிவாக உள்ள பாசமும் நிருவிகற்பமாய்த் தோன்றும். மேலும், பதி, உயிருக்கு உயிராய் அணுவே ஓரண்டமென்று உவமிக்கலாம்படி சிறிதாய்நிற்கும் நிலையும், எல்லாப் பொருளினும் மேம்பட்ட வியாபகமாய் அண்டமும் ஓர் அணு என்று கூறும்படிப் பெரிதாய் எங்கும் நிறைந்துநின்ற நிலையும் நிருவிகற்பமாய் விளங்கித்தோன்றும்.

ஆசிரியனுடைய ஞானம் மாணுக்கனிடத்துச் சென்று தோன்றுவதை ஞானம் என்பர் சிலர்; அது பொருந்தாது. ஆனால், ஆசிரியனுடைய கிருபையினால் மாணுக்கனுடைய அறிவு விளங்கித் தோன்றுவதே இந்நிலையில் நிகழ்வது ஆகும். "நேரியனாய்ப் பரியனுமாய்" என்ற சித்தியார்ச் சொற்றொடர் இக் கருத்தை உணர்த்துவதாகும். ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளும் இத்தகையநிலையை எய்திய தன்மையை,

> ''வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க''

என்ற வாசகத்தால் அறியலாகும்.

> '' புலையனேனையும் பொருளென நினைந்துஉன் அருள்புரிந்தனை;
> புரிதலும் களித்துத் தலையினால் நடந்தேன் ''

என்று இவ்வாசிரியரே பின்னும் கூறுதலாலும் இஃதுணரப்படும். இங்குக்கூறப்படும் நிருவிகற்பம் என்பது சவிகற்பத்துக்கு முன்னாக நிகழும் நிருவிகற்பத் தோற்றமாம்.

## சிந்தித்தல்ஞானம் :

பக்குவமுதிர்ச்சி உடைய தீவிரதர சத்திநிபாதமுடைய மாணுக்கருக்கு இதன்முன் அடையப்பெற்ற கேட்டலறிவு முதிர்ந்து முறுகிவிளையும். அப்போது அவர், ஆசிரியர் துணைகொண்டேனும், தம்மோடு ஒத்தார் மிக்கார் துணைகொண்டேனும் தாம் கேட்ட பொருளைச் சிந்திக்கும் முறைகொண்டு நிட்டை கூடுதற்கண் ஆசை பெரிதும் அடைவர். அங்ஙனம் அடைந்த ஆசையால் சிந்தித்தல்தொழில் ஒன்றையே மேற்கொள்வர். ஓடும் பொன்னும் ஒப்பநோக்கும்

நிலை எய்துவர். மற்ற எதிலும் பற்றுவைக்க மாட்டார்கள். சீவன்முத்தர்போல ஆவர். பேரறிவாகிய சிவமும் - சிற்றறிவாகிய தாமும், ஆதித்தன் ஒளியும் கண் ஒளியும்போல அத்துவிதமாகக் கலந்து நிற்கப் பெறுவர். அப்போது, தாம் ஒருபொருள் இருப்பதான நினைவே இராது. சிவத்தோற்றம் ஒன்றே காணப்பெறுவார்கள். இது சவிகற்பத்துக்கும் நிருவிகற்பத்துக்கும் இடைநின்றநிலை எனப்படும். இதனால், சிவஞானம் பெற்ற பின்னர், சிந்திக்கும் முறையில் நிற்போர் அம்முறையில் தம்மையும் தலைவனையும் காண்பர் எனத் தெரியலாம்.

"பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க"

என்பதனால் பிறவியை அறவே தொலைப்போன் சிவனேயாதல் பெறப்படும். "அருங்கற்பனை கற்பித்து ஆண்டாய்" எனப் பின்னும் சுவாமிகள் இதனை உரைப்பர்.

இனிச் சிவப்பிரகாசம் ஒன்பதாம் சூத்திரத்து மூன்றாம் செய்யுளாகிய "அடைபவர் சிவமேயாகும் அதுவன்றி" என்றதன் இடத்திலே "பின்னும் தொடர்வு அரும் அருளினாலும் தோன்றுமா காணாராயின் - உடையவன் அடிசேர் ஞானம் உணர்தல் இன்று; அணைதலின்றே" எனக் கூறியிருப்பதான ஆன்மசுத்திநிலையினைக் காணல் ஆகும். இதனில் "அடிசேர் ஞானம்" என்பதற்கிணங்கச் சுவாமிகள் "**பெய்கழல்கள்**" என்று முன்பு அருளிச்செய்திருத்தல் தெரியப்படும். முன்பு வேந்தன் என்றவர் இங்குப் பிஞ்ஞகன் என்று கூறியுள்ள சிறப்பும் கருதற்பாலதாகும்.

தெளிதல்ஞானம் :

ஞானசாரியரது திருவருளால் அறியாமையாகிய கேவலம் நீங்குகிறது. உலகத்தை அறிதலாகிய சகலமும் நீங்குகிறது. இதனால், இருவகைப் பாசங்களும் அற்றன ஆகும். முதல்வனை அறியும்முறையைத் தன்னறிவின்கண்ணே கேட்கும்முறையில் கேட்டுச் சிந்திக்கும் முறையில் சிந்தித்து அதன் பிறகு, சிந்திக்கப்பட்ட பொருளினிடத்தே அன்புவைத்து, அந்தக்கரணங்களிற் சேராது அடங்கி நிற்கப்பெறவேண்டும். அப்படிப் பெற்றால், தம்மோடு பிரிவின்றி உளதாகிய முதல்வன் இயல்பு நேரியனும் பரியனுமாயதோர் முறைமையால் உடனாய்நிற்றல் தோன்றும். முன்பு கேட்டபொழுது பொருள்தன்மை பற்றி வேறாய்த் தோன்றியது. சிந்தித்தபோது உலகபேதம் அனைத்தினும் கலப்புப்பற்றி ஒன்றாய்த் தோன்றியது. இப்போது (தெளிதலில்) உடனாய்நிற்றல்பற்றி ஒன்றிலும் பற்றிலனாய் முதல்வன் இயல்பு எக்காலத்தும் எப்பொருளிடத்தும் நிறைந்து தோன்றும். இந்த நிலையைப்பற்றிய "அறியாமை அறிவகற்றி" என்னும் சித்தியார்ப்பாடல் இங்குத் தெளிய அறிதல் நன்றாம். இதனைச் சிவபோகசாரநூலுடையாரும், தாயுமானாரும் தத்தம் பாடல்களிலே சிறப்பித்துக் கூறியுள்ளார்கள்.

அந்தக்கரணங்கள் அடங்குதலும், உள்ளும் புறம்புபோல முதல்வனியல்பு விளங்கித் தோன்றலும் தெளிதல் ஞானத்தின் இயல்பாதலை நம் சுவாமிகள்,

" கரங்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க "

என்றவாசகத்தால் தெளியச்சொல்வதிற் காணலாம். இங்குக் கோன் என்ற பதப்பிரயோகம் இருத்தல் ஆய்ந்து தெளிதற்குரியது. "நாமார்க்கும் குடிஅல் லோம்" என்ற தேவாரம் கோனியல்பு காட்டவல்ல தாகும். "திருவடியே தஞ்சம்உள் தெளிவோர்க்கே" என்பது திருமந்திரம். இதற்கேற்பக் கழல் கூறப்பட் டுள்ளமை தெரியலாம்.

## நிட்டைஞானம் :

நிட்டை ஞானம் என்பதே ஞானத்தில் ஞானமாம். இது, சிவபிரானை அருச்சித்தல் முதல் சிந்தித்தல் ஈருகிய ஞானபூசையின் பயனுன தெளிதலின் பின்ன தாக நிகழ்வதாகும். இந்தநிலையில் வியாபக இயல்பு உடைய உயிரானது அதனை இழந்து ஏகதேசப்பட்டு நரகத்துக்கும் சுவர்க்கத்துக்கும் சென்றுகொண் டிருந்த போக்கு வரவு ஒழியப்பெறும். இதனுல் உயி ருக்குப் பாவபுண்ணியப் பயனில்லையாயிற்று. இதனுல் உயிர் கரணங்களின்வயமாதல் நீங்கப்பெறுகின்றது. இறைவனுடைய வியாபகத்தில் உயிர் கலந்துவிடும். இவர்கள்நிலை ஜீவன்முத்தர்நிலை எனப்படும். இம்மை யில் உடம்போடிருக்கையில் இந்தநிலையே ஓங்கியநிலை. இந்தநிலை அடையப்பெற்ருர், மனக்கவலை சிவலையும் இல்லார் ஆவார். அதாவது, சூரியன் எவ்விடத்து உதயமாயினும் எமக்கு என்? என்றிருப்பார். உடம்பு உள்ளவரையினும் குறை ஏதும் இலராய் வாசனு மலமும் அறப்பயின்று வாழ்வர். உடம்பு நீங்கிய பின்னர், பரமுத்திநிலையில் தமது வியாபகம் முழுதும் அறிவுவிளங்கப்பெற்று முதல்வனேடு ஒன்றுபடுவர். இதுவே சிவனேடு சமமாதலாகிய பொதுத்தருமம்

ஆம். இதற்குச் சிறப்புத்தருமம் என்பது சித்தாந்த முத்தியில் இலது. இதனால் பஞ்சகிருத்தியம்செய்தல் உயிருக்கு இல்லை என்க. இத்தகையார், இம்மையில் எப்போதும் மேலோனாகிய சிவபிரான் திருவடியை விட்டுப் பிரியமாட்டார்கள். இதனை,

"சிரம்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க"

என்று நம் சுவாமிகள் அருளிச்செய்திருப்பதனால் அறியலாகும். திருவடியைவிட்டுப் பிரியா நிலைமை யினைச் சிரம்குவிவார் என்பது உணர்த்தும். ஓங்கு விக்கும் என்பது இப்பேற்றின் சிறந்தபேறு வேறு இல்லை என்பதையும், உயிர் தனக்குரியதான வியாபக நிலையை எய்தப்பெறும் என்பதையும் உணர்த்தும். சீரோன் என்ற பதத்தின் நுட்பம் உணரத்தக்கது. வற்றுதலும் முற்றுதலும் இல்லாதவிளைவே சீர்மை ஆகும். எனவே ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகள் "வேகம் கெடுத்தாண்ட" என்பது முதல் "சிரம் குவிவார்" என்ற வரையிலும் உள்ள ஐந்து வாசகங் களாலும் குருத்துதியை ஞானத்தின் நான்குநிலை வழி புலப்படுமாறு அருளியிருத்தல் காணலாம். "புறத்தார்க்கு" என்ற இடம் ஞானமற்றவரைச் சுட்டு தலினால் மேற்கோளாக இங்கு எடுத்துக் காட்டப் படாததாயிற்று என்க. எனவே நிட்டைஞானமே ஞானநிட்டையாம்.

ஞானநிட்டை மேவப்பெற்ற சீவன்முத்தருக்கு இருவினைகளும் இல்லை. பல்லில் நாட்டமில்லை. தவம் முதல் குலாசாரம் ஈறான எந்த நியமமும் இல்லை. இவர்கள் பயன் கருதாது தொழில்செய்யும் பாலரை

நிகர்ப்பர். ஆதலால், இவர்க்கு மாயாமலம் இல்லை ஆயிற்று. பித்தர்போல ஒரு காரியத்தை நியதி இன்றிச் செய்வர். பித்தர், விருப்பு வெறுப்பின்றித் தொழில் செய்பவராதலால் இவ்வுவமையால் இவர் கன்மமலம் இல்லை யாவர் என்னலாம். மற்றும் இவர்கள், பேய் பிடிக்கப்பட்டவர்போலத் தேகத்தில் தான் என்கிற போதம் அற்றுச் சிவமே தானாகநின்று செய்வர். பாடலாடல்களையும் பரமானந்தத்தால் நிகழ்த்துவர். இவ்வாறு தன்னை மறந்து இவர்கள் தொழில் செய்தலால் ஆணவமலம் இல்லையாவர். இதுவே நிருவிகற்ப ஞானமாம் நிலை எனப்படும். இதனால், ஞானநிட்டையினரை விட்டு நன்மை தீமைகள், "உறங்கினோன்கை வெறும்பாக்கெனவே" தாமே தவிரும் என்க.

இத்தகையவர்கள் செய்யும் காரியங்கள் முன்னுக்குப் பின் முரண்பாடுடையன போலக் காணப்படும். இவர்கள் அறிவு விகாரப்படுவதில்லை யாதலால், இவர்கள் முதல்வன் திருவடியைவிட்டு நீங்கமாட்டார்கள். வாயுவானது ஆகாயத்தை இடமாகக்கொண்டது. அது வாசனையுடன் கூடிய தென்றலாக வீசினாலும், அல்லது இதற்கு மாறான சூறுவளியாக வீசினாலும் ஆகாயத்தைவிட்டு நீங்குவதில்லை. இது இவர்கள் இறைவன் திருவடி நீங்கா நிலைமைக்கு உவமையாம். இவர்கள் எத்தொழில் செய்யினும் அறிவு விகாரப்படுவதில்லை என்பதற்கு "மீன்கள் கடலில்தோன்றி வாழும் தொழில்களை உடையன ஆயினும், இனிய சுவையைத்தரும் உப்போடு கூடமாட்டா" என்ற உவமை காட்டுவர். ஆகவே பந்தமுறார் என்பது பெறப்படும்.

இவ்வாறன ஞானநிட்டை நிலை அடையவொட்டாதபடி ஏகதேசம் செய்யுமானால், சிவாநுபவத்தைச் சுவாநுபூதிகமாக ஆக்கிக் கொள்ளுதற்பொருட்டு, எல்லாப்பொருளும் இறைவனிடத்திருக்கின்றன என்னும் உள்ளாதல் தன்மையையும் (All in one), இறைவன் எல்லாப் பொருளினிடத்தும் இருப்பன் என்கிற புறமாதல் இயல்பையும் (One in all) அறிந்து, பசுகரணமெல்லாம் சிவகரணமாகப் பேணி, இப்படிக் கருவிகளோடு தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்திலே, கருவி ஒன்றோடும்கூடாத நின்மல துரியாதீதநிலை கைவருமாறு முயலவேண்டும். முயன்றால் மேற்கூறப்பட்ட சீவன்முத்தரியல்பை எய்தலாகும். இஃது ஓர் உபாயமாகும். மேற்கூறப்பட்ட இருவகை நிலையினரும் ஒப்ப மதிக்கப்படுபவரே ஆவர். இத்தகையவர்களைச் சஞ்சரிக்கின்ற சிவம் எனவே கூறுவர். இதுபற்றியே ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளைப்பற்றிச் சிறப்பிப்போர் இவரை அறிவால் சிவமே ஆயினார் என்று கூறுவர். "தேவர்தொழும் வாதவூர்த் தேவே" என்பர் தாயுமானார். இவ்வகை நிலையினருக்கு அகப்பற்று இல்லை. ஆகையால் இவர்கள் எத்தொழிலும் எவ்வேடமும் பூண்டிருப்பினும் உலகத்தாரோடு வைத்து எண்ணப்படார்; சிவமாகவே கருதப்படுவர். அறிவால் சிவமாயினராதலாலே ஸ்ரீ வாதவூரர் வரலாறு திருத்தொண்டர் புராணத்துக் கூறப்படாதாயிற்று என்பர் அறிவோர். மற்றும், ஞானநிட்டைகளின் விரிவை அறிய விரும்புவோர் சிவஞானபோதத்து 8, 9, 10, 11 ஆம் சூத்திர விரிவுகளால் தெரியலாம்.

சுருங்கக்கூறின், ஞானசாத்திரப் பொருளைக் குருவினிடத்தே கேட்டலே ஞானத்தில் சரியை ஆம். அப்பொருளை ஏது திருட்டாந்தங்களுடன் சிந்தித்தலே ஞானத்திற் கிரியை ஆம். அப்பொருளை ஐயம் விபரீதம் இன்றித் தெளிதலே ஞானத்தில் யோகமாம். ஞானத்தில் ஞானமாவது சிவபெருமானோடு அபேதமாய்க்கலந்து நிட்டைகூடுதல் ஆம். இந்த நிட்டை நிலையே நம் சுவாமிகள் தில்லையிலே மேற்கொண்டு எழுந்தருளியதாகும். இது கிடைத்தற்கரிய நிலையாதலால், இதனைத் தாம் பெற்றதுபோல யாவரும் அடையவேண்டும் என அவாவியே, நமக்கெல்லாம் துணிவு பிறப்பித்தற்பொருட்டு,

> "செம்மைநலம் அறியாத சிதடரொடும் திரிவேனை
> மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்
> நம்மையும்ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
> அம்மைஎனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே"

என்று திருவாய்மலர்ந்தருளியுள்ளார் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்.

## முடிபுரை :

சிவ வியாபகத்துள்ளே அதனை அறியாமலே மலமறைப்போடு கிடக்கின்ற நமக்கெல்லாம் சிவபோத விளைவே விடுதலை அளிக்கும் சாதனமாகும். ஒரு மங்கையின் அழகினை எவ்வளவுதான் குருடன், கேள்விமூலமும், பரிசமூலமும் அறியப்பெற்றாலும், கண் தெரியப்பெற்ற பின்னரே முழுமையும் அறிய முடியும். ஆகவே, நாமனைவரும் சற்குரு திருவருளுக்கு ஏங்கிக்கிடந்து அடையப்பெற்று அவருபதேசவழி

நிற்கப்பெற்றபின்னரே சிவபோத இயல்பினை முற்றும் தெரியமுடியும். அவ்வாறிருக்க, இதன் இயல்பை அறியா இயல்புடைய அடியேன் சொல்ல முயல்வது இப்படி ஒரு விழுமியபொருள் உளதென்பதை நினைவுறுத்திக்கொள்ளும் குறிப்புடையதே ஆகும். குற்றமும் நற்றமும் சிவபோதமுற்றவர்க்கு ஒரு நிகரவே யாகுமென்பதே துணிபாம். ஆதலின், பிழை பொறுக்கப்படுவதாக !

இம் முதல் அத்தியாயத்திலே சிவபோதத்தின் அவசியமும், அதன் சிறப்பும், அதனை அடைய வேண்டிய முறையும் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. இது பொதுஅத்தியாயம் ஆகும். கண்ணொளிக்கு ஆன்மபோதம் அவசியமாதல் போலவே, சிவப்பேற்றினுக்குச் சிவபோதப்பேறு இன்றியமையாதது ஆகும். இத்தகைய சிவபோதம் மக்களாவார் எல்லாரும், இப்பிறப்பிலேயோ, பலபிறப்பெடுத்தோ பெற்றே தீரவேண்டும் என்ற கருணையினாலேதான் சமயங்கள் வகுப்புண்டன. இவ்வொரு பிறப்பிலேயே சுத்த அத்வைதமுத்தி அடைவதற்கான முறைமை சித்தாந்த சைவ சமயத்தே அமையக் கூறப்பட்டுள்ளது. எல்லாச் சமயநெறிகளும் இச் சித்தாந்த சைவத்தை அடைதற்கே படிகளாகவும் வழிகளாகவும் உள்ளன என்பதே உண்மை. சித்தாந்த சைவத்துள் எல்லாச் சமயங்களும் அடங்கி வியாப்பியமாகவும் வியாத்தியாகவும் உள்ளன. ஆதலால், இதற்கு எச்சமயத்தோடும் பகைமை இலது. தோழமையே உளது. அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்கிற நால்வகையான உறவுமுறை பாராட்டி எல்லாச் சமயத்தையும் இஃது ஆதரிக்கின்றது.

இதனை நேரே அடையப்பெற்றார் ஆலய வீதியை அடையப்பெற்றாரை நிகர்ப்பர். பிறசமய நெறி சேரப் பெற்றார் ஆலய வீதிக்கு வந்துசேருகின்றவையான பிற தெருவுகளை அடையப்பெற்றாரை நிகர்ப்பர். ஆதலால், இம்முதல் அத்தியாயத்திலே, சிவபோதப் பேற்றுக்கு அடிப்படையாவது ஒழுக்கமென நாட்டிப் பின்னர் படிப்படியாகப் பலவகைச் சமயங்களும் இதனை அடைய எவ்வளவுதூரம் வழியாகி உதவு கின்றன என்கிற விவரம் சிறிது தரப்பட்டுள்ளது. இதனை அடுத்து இத்தகைப் போதத்தினை எய்து தற்கு உதவிபுரியும் கலையறிவுபற்றிப் பேசப்பட் டுள்ளது.

உலகநூலறிவினை ஒதுக்கிச் சமய நூலறிவை நாம் பெறவேண்டும். இதற்கு முதற்படியாயிருப்பது வேதமே. இதன்பின் வேதாந்தம் எனப்படும் உப நிடதம் நின்று வழிகாட்டுகிறது. இதனை அடுத்து எடுத்து உறுதி (ஞானம்) உரைப்பன ஆகமங்கள். அவை தம்முள்ளும் ஒருசில நுணித்துரைப்பன ஆம். இப்படியாக உள்ளவற்றை உதாரணமூலம் காட்ட வந்தன புராணங்கள். இவைகளை எல்லாம் வடமொழி யறிவுகொண்டு படிக்கவேண்டுவதாயுள்ளது. இத னால், வடமொழி அறிவில்லாதார்க்கு வழி ஏதும் இல்லையோ என்ற ஐயம் எழலாம். அக்குறையைப் போக்குமாறு உதவப்பட்டவையே தேவாரம் - திரு வாசகம் - திருமந்திரம் - மெய்கண்டசாத்திரங்கள் - திருவிளையாடல் - பெரியபுராணங்கள் என்பன. இவை களை ஓதுவது ஞானவாயிலாகும். இவற்றுள்ளும் சுருங்கவுரைத்துத் தெளிவிப்பது சிவஞானபோத

சாத்திரம். இதனை, ஓதுவித்தலாலும் நிறுத்துவித்தலாலும் நம்மை ஈடேறச் செய்தற்பொருட்டே ஸ்ரீகண்டசிவம் முதலான ஞானகுருசந்தானம் இவ்வுலகிலே - நம் தென்னாட்டிலே - திருவாவடுதுறைத் திருமடாலயத்திலே - நிலவிவருகின்றதென்னலாம். ஆதலால், ஞான நூல்களை ஓதிச் சதாசாரியரை அடுத்துச் சிவபோதம் எய்தப்பெற்று வாழலாம்.

மற்றும், ஸ்ரீ மணிவாசகப்பெருமானுக்கு உபதேசிக்கப் பட்டதான சிவஞானபோதசாத்திரம் சொல்லும், சரியை - கிரியை - யோகம் - ஞானம் என்னும் உண்மைத் தவநெறி பற்றியேனும் கரையேறலாம். நாமும் திருவாதவூரர் போன்ற பக்குவநிலை எய்தப் பெற்றால் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் முறையே ஞானாசாரியரால் உபதேசித்து ஆட்கொள்ளப்பட்டு ஞான நிட்டை மேவப்பெறலாம். இங்ஙனமாய துறையிலே ஒழுகி, நமக்குய்தி சொல்லியும் மேற்கொண்டும் காட்டியருளிய பெருமை உடையவர் நம் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள். இதுவே இம்முதல் அத்தியாயம் சொல்வது. இனித் தூலமான முறையிலே திருவாதவூரர் வரலாற்றை விளம்பிக்கொண்டு, பிறகு அச்சுவாமிகள் சிவபோதவாழ்க்கையில் நின்றருளிய திறத்தினைத் தெரிந்தமட்டில் பேசுவோம்.

**கோகழிநாதன் குரைகழல் போற்றி!**
**பெருந்துறை பேணிய பெம்மான் போற்றி!!**
**தில்லை மேவிய தேசன் போற்றி!!!**

# இரண்டாம் அத்தியாயம்

## ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகளின்

## வாழ்க்கைப்பகுதி

"மணிமுடி அரசர்கோன் மதுரைப் பாண்டியன்
அணிமுடி அமைச்சராய் அவனி மீதிலே
பணிமுடி யவருப தேசம் பண்ணவே
துணிவொடு பாடினோர் சரணம் சூடுவாம்."

—திருநெல்வேலிப்புராணம்.

### திருவாதவூரர் பிறப்பு :

இதுகாறும் முதல் அத்தியாயத்தில் திருவாதவூரர், தமது பிறப்பறுத்தற்குத் தேர்ந்துகொண்டருளிய சிவபோதம் என்கிற ஞான நன்னெறியின் இயல்புகள் ஒரு சிறிது உரைக்கப்பட்டன. இனி, இந்த அத்தியாயத்திலே, அவருடைய வாழ்க்கை வரலாறு இயன்றமட்டும் சுருக்கமாகத் தெரிவிக்கலாகிறது. இந்த அவருடைய வாழ்க்கை சென்ற நெறியை நாம் அறிந்தால், அடுத்த அத்தியாயத்தில் அவ்வாழ்க்கை எவ்வளவுதூரம் சிவபோத நெறியோடு பிணைந்து சென்றுள்ளது என்பதை ஆராய்தல் எளிதாகும். முதலில், இவர் தம் பிறப்புபற்றிய செய்தியினைப் பார்ப்போம்.

பரதகண்டத்தே பழமைச் சிறப்புடையது பாண்டிநாடு. இதன் தலைநகரம் கன்னியும், கண்ணுதலும், கதிர்வேலனும் அமர்ந்து அரசுசெலுத்திய பெருமை வாய்ந்த மதுரையம்பதியாகும். இந்த நகருக்குக் கிழக்கே சுமார் ஏழுமைல் தூரத்தில் உள்ளது

திருவாதவூர் என்னும் பதி. இது வையைநதியின் வட கரையிலிருப்பது. இந்த ஊரிலே அந்தணர் பலர் வாழ்ந்துவந்தனர். அவருள்ளும், சிவனடி மறவாச் சிந்தையாளர் ஒருவர் சிவநெறியில் வழுவாது ஒழுகி வந்தார். இவர் பெயர் சம்புபாதாசிருதர் என்பர் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள். வடமொழி ஆலாஸ்யம் சுந்தரநாதர் என்னும். இவரது மனைவியார் பெயர் சிவஞானவதி அம்மையார் ஆகும். இவர்களுடைய தவத்தால் உதிக்கப்பெற்றவர் திரு வாதவூரர். இவரது இயற்பெயர் இதுவே எனவும், சிவபாத்தியர் என்பதாகும் எனவும் கூறுவர். இவர் முற்பிறவியிலே கயிலையில் கணநாதராக இருந்தவர் என்பர். "குடமுழநந்தீசனை வாசகனுக்கொண்டார்" என்று அப்பர் அருளிச்செய்தலும், "நீக்கிமுன் என்னைத் தன்னொடு நிலாவகைக் குரம்பையிற் புகப் பெய்து" என்று அடிகளே அருளிச் செய்தலும் இச் செய்தி செப்புவன என்பர். அன்றியும், இவர் ஒரு கயிலைச்சித்தர் எனவும், கவனகுளிகையை இழந்தமை யால் பூமிக்கு வரலுற்றார் எனவும் சிலர் கூறுவர். இவ்வரலாறுகள் எவ்வாறு உரைப்பினும், இவர், சிவபெருமான் திருவருளால், நம்மனோர்க்கு ஞான நெறி விளங்கும்பொருட்டுத் திருவவதரித்த பெரியார் என்பதில் ஐயமில்லை. வாயுவானது எங்கு எவ்வாறு சரிப்பினும் வானத்தையேபற்றிக் கிடப்பதுபோன்று, இவரும் வாதவூரிலே தோன்றப்பெறினும் சிவபாதப் போதினையேபற்றி வாழலுற்றார் என்னலாம்.

மற்றும் திருவாதவூரர் குலம்பற்றியும் பற்பல கொள்கைகள் நிலவுகின்றன. வடமொழிநூல் ஆதி சைவகுலம் என்கிறது. ஆமாத்தியர்குலம் எனவும்

அமாத்தியர்குலம் எனவும் வேறுபல வரலாறுகள் பேசும். ஆதிசைவ அந்தணர் எனவும் கூறுவார் உளர். பாண்டிமண்டல மத்தியில் வாழலுற்ற இவர் குலம் மாத்தியர் அல்லது மாமாத்தியர் குலமாகலாம் என்றும் கூறுவர். நியோகி எனப்படும் பிராமணர் குலமாகலாம் எனவும் ஆய்வர். அன்றியும், மாமாத் திரர் வமிசம் என்றும் கருதுவர். வேளாப்பார்ப்பார் இனம் எனவும் எடுத்துரைப்பதுண்டு. எவ்வாறிருப் பினும், இவர் ஒழுக்கமுறை வழுவாத அந்தணர் ஆம் அறவோர் என்றல் அமையும். ஆராத்தியப் பிராமண குலத்தினராக இருக்கக்கூடும் என்றும் ஆராய்ச்சி செய்வாருளர். எங்ஙனமாயினும் இவர் மேற்கொண் டொழுகிய கொள்கைகொண்டு காண்பின் சுத்த அத் வைத சைவசித்தாந்த மரபினர் என்பது உறுதியாம்.

**கல்வி :**

திருவாதவூரர் உலகநூலும், வேதமுதலாம் கடவுள் நூலும் கசடறக் கற்றவர். பதினறும் ஆண் டளவிலே சகல கலைகளையும் கற்று வல்லவராக விளங் கினர். உலகியல், அறிவியல் என்னும் இருதுறைப் பனுவல்களையும் இவர் ஓதியுணர்ந்திருந்தமையால், முறையே இவ்விருவகை வாழ்க்கைகளையும் இவர் திறமுற மேற்கொண்டொழுக இயன்றதென்னலாம்.

" கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும் "

எனவும்,

" சிரதமாகவே சாத்திரம் காட்டினர் "

எனவும் இவரை கூறிக்காட்டுதல்கொண்டு இவரது கலைத்துறைப்பயில்வு உணரப்படும். எனினும், ஓதுதலின் சிறந்தது ஒழுக்கமுடைமை என்ற கொள்கையே பூண்டவர் இவர் என்பதே தெளிவாம். "நிற்க அதற்குத் தக" என்பதே நன்முறை.

அலுவல்:

கலைகள் நிறையப்பெற்ற பூரணமதியின் நிலாப் பரப்புப்போலும், கலைகள் நிறையப்பெற்றுப் பதினறுட்டைப் பருவம் எய்தப்பெற்ற இவரது கலைவழி மேவிய ஒழுக்கமாகிய விழுப்புகழ் எங்கும் பரவியது. இவரது வரும்பொருள் உரைக்கும் திறம் முதலியவற்றை, அக்காலத்தே மதுரையிலிருந்து செங்கோல் ஓச்சிவந்த அரிமர்த்தனன் என்னும் பாண்டியவேந்தன் கேள்வியுற்றான். "அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்" என்பதற்கிணங்க அவ்வழுதியர்கோன் வாதவூரரைத் தன்பால் அமைச்சராக்கிக்கொண்டான். வாதவூரரும் வேந்தவாம் பண்புகள் பலவும் உடையவராய்க் குடிகாத்தல், பொருள் பெருக்கல், பகைதணித்தல் முதலிய எல்லாத்திறமையுங்கொண்டொழுகுதலை அறிந்த பாண்டியன், இவரை அமைச்சருள் தலைமையுடையவர் எனத் தெரிவிக்குமாறு "தென்னவன் பிரமராயன்" என்ற சிறப்புப் பெயரிட்டுப் பெருமைப்படுத்தினன், சிவிகை முதலான விருதுகளும் சிறப்புற அளித்தான். இங்ஙனம், அரசன், தனக்குச் சிறப்புகள் செய்யச்செய்ய வாதவூரர் நெஞ்சம் செருக்கடையப்பெறுமல் அவற்றின் நிலையாமை சிந்திக்கலுற்றது. நல்கல்வி கைகொடுத்துதவுவது இப்படித்தான் நிகழும். தேகம், செல்வம்

முதலியவற்றின் நிலையின்மை உணர்ந்துள்ள வாத ஊரர் உள்ளம் பதிநூலேயே நன்கு ஆயத்தலைப் பட்டது. செல்லுந்தேயத்துக்கான உறுதுணையை அவர் நெஞ்சம் நாளும் நாடலுற்றது. "உடம்பும் மிகை" என்ற உள்ளத்துணிவு அவரைச் சிவத்தை அன்புவழியால் அடையத் தூண்டிற்று. இதனால், "அரசரை அடைந்தமையால் பெறும்சுகம் போதும்; ஆசாரியரை அடைந்து ஆனந்தநிலை அடைய வேண்டும்" என்ற எண்ணமே எப்போதும் மேலிட்டது. ஆகவே, அரசர்பக்கல், தாமரையிலைத் தண்ணீர்போல், உள்ளத்துவர்ப்போடும் ஒழுகிவரலானார். ஞானிகள்நெஞ்சம் இவ்வாறுதான் கருதும்.

இங்ஙனமிருக்கையில், ஒருநாள் பாண்டியன், தன் அவைக்களத்தில் சேரசோழ மன்னர்களுடன் அளவளாவிக் கொண்டிருக்க நேர்ந்தான். அப்போது பாண்டியனிடம், அவனுடைய குதிரைப்படைக் காப்பாளர் குதிரைப்படையின் குறைவுபற்றி விண்ணப்பித்து, நல்ல குதிரைகள் சோழனாட்டுத் துறைமுகத்தில் வந்து இறங்குவதையும் தெரிவித்தனர். வேந்தனும், தன் செல்வத்துளெல்லாம் படையே சிறந்த செல்வமெனக்கருதி, உடனே, நாற்பத்தொன்பது கோடிப் பொன்னைத்தந்து, வாதவூரரை அப்பொழுதே புறப்பட்டுச்சென்று குதிரைகள் வாங்கி வரக் கட்டளை தந்தான். வாதவூரரும பரிசனருடன் ஆரிய வணிகர் கீழ்கடற்கரையில் குதிரைகளைக் கொணர்ந்து இறக்குமிடம்நோக்கி விரைந்து செல்லலானார். வழிபலகடந்து கழிசூழ்ந்த திருப்பெருந்துறை என்னும் இடம் அணுகினார்.

### சிவகுருதரிசனம்:

திருப்பெருந்துறை அடைகையில், 'அரகர' முழக்கம் கடலென ஒலித்தது. சிவபெருமான், வாத ஊரரை ஆட்கொள்ளத் திருவுள்ளங்கொண்டு, தமது கணங்களை மாணுக்கராகக்கொண்டு, தாம் மானுடக் கோலம்பூண்டு ஞானுசாரியராகிக் குருந்தமரத்தின் நிழலில் ஞானபோதனை செய்யுங்காட்சியராய் வீற்றிருக்கலானுர். இக்காட்சியைக் கண்டதும், பொருள் கொண்டு குதிரைவாங்க வந்துள்ள எண்ணம் நழுவப் பெற்று அருள்கொண்டு சிவத்தை அடையவேண்டுமென்ற எண்ணம் மேலிடப்பெற்ருர் வாதவூரர். தமது உள்ளார்ந்த ஞானநாட்டம் ஈடேறுங்காலம் அணுகி விட்டது என அவரது உள்ளம் குதுகலித்தது. "தொழுதகை தலைமேல்ஏறத் துளும்பு கண்ணீருள் மூழ்கி"க் காந்தங்கண்ட இரும்புபோலக் குருமூர்த்திகளை நெருங்கி அவரடிகளிலே அடியற்ற மரம்போல வீழ்ந்து, தம்மை ஆட்கொள்ளும்படி வேண்டி இறைஞ்சினுர். ஞானுசாரியரும், அவரது அதிதீவிர பக்குவ நிலையைக்கண்டு நோக்காலும், பரிசத்தாலும், வாக்காலும் ஞானதீட்சை செய்தருளினுர். பின்பு, தமது திருக்கரத்திலே உள்ள சிவஞானபோத சாத்திரநெறி இன்னதென விளங்குமாறு பதி, பசு, பாச முப்பொருளியல்புகளையும், ஐந்தெழுத்து அருமறையினையும், உபதேசம் செய்தருளினர். உள்ளங்கை நெல்லிக்கனி எனச் சிவஞானம் கைவரப்பெற்ற வாதவூரர், குருநாதர்க்குத் தமது உடல் பொருள் ஆவி மூன்றையும் உரிமையாக்கினுர். சிவபத்திமீதூரப்பெற்ருர். அற்புத ஞானப் பாடல்களைப் பாடித் துதித்தார். குருந்த

மேவிய குருநாதரும், இவரது மாணிக்கத்தை நிகர்க்கும் வாசகத்தைத் திருச்செவி ஏற்று வாதவூரர்க்கு மாணிக்கவாசகர் என்னும் தீக்ஷாநாமம் சூட்டியருளினார். மாணிக்கவாசகர் தாம் குதிரை வாங்குதற்குக் கொணர்ந்த, அரசர்பொருளனைத்தையும் அவ்வரசரும் சிவபுண்ணியப் பயனெய்தும்பொருட்டுத் தம் ஞானசாரியர் திருவடிகளிலே சமர்ப்பித்து நின்றார். ஞானகுரவர், தமக்கு அர்ப்பணிக்கப்பட்ட அப்பொருளைக்கொண்டு அத்திருப்பெருந்துறையிலே சிவாலயத் திருப்பணி செய்யுமாறு கட்டளையிட்டுத் தாமும் மறைந்தருளினார். அங்ஙனம் மறைந்தருளிய சிவகுருநாதரை உள்ளி உள்ளி உள்ளம் உருகப்பாடி, அவரிட்ட கட்டளைப்படியே குதிரைகொள்ளக் கொணர்ந்த செல்வமனைத்தையும், சிவாலயத் திருப்பணியிலும், பிற அறங்களிலும் செலவிட்டு, நீத்தாராகித் திருப்பெருந்துறையிலே நிட்டானுபூதியிலே சுகித்திருக்கலானார் மணிவாசகர்.

## நரி பரியாகிய திருவிளையாடல் :

திருஅருள்வயப்பட்ட மணிவாசகரது இச்செயலை ஏவலாளரால் பாண்டியன் அறிந்தான். வாதவூரரை உடனே திரும்பிவர ஆணையிட்டு ஓலைபோக்கினான். தற்செயலெல்லாம் அறப்பெற்ற மணிவாசகர், பெருந்துறைப் பெம்மானிடம் முறையிட்டு வேண்டினார். (இவ்விடம், இராமதாசர் வரலாறொப்புமை கொண்டிருப்பதைக் காணலாம்.) பெம்மான், ஒரு மாணிக்க மணியினை அளித்து, அதனை அரசருக்குக் கையுறையாகத் தந்து குதிரைகள் ஆவணிமூலத்தன்று வந்துசேரும் என்று தெரிவித்துக்கொள்ளுமாறு

வாதவூரர்க்கு அறிவித்தார். அப்படியே அரசரிடம் சென்று தந்து தெரிவித்தனர் மணிவாசகர்.

ஆவணிமூலம் நெருங்கிற்று. குதிரைகள் வருவதற்கான அறிகுறியே இல்லை. உண்மை அறியமாட்டாத அரசன், வாதவூரரைப் பொய்யரெனக் கருதிச் சிறையிலிட்டு ஒறுக்கலுற்றான். கருணைக் கடவுளாகிய பெருமான் கனிவுகொண்டார். வாதவூரர், "நானே இதற்கு நாயகமே" என்று சிவனடிமறவாச் சிந்தையராய் உறுதியோடிருந்தார். சிவபரம்பொருள், திருப்பெருந்துறை அருகுள்ள வனத்தே வாழும் நரிகளை எல்லாம் ஒன்றுகூட்டினார். அப்பிரதேசம் தற்போது நரிக்குடி என்ற பெயரால் வழங்கப்படுகிறதென்பர். அவைகளை எல்லாம், தமது வல்லமையால் பரிகளாக மாற்றினார். தாம் குதிரைத் தலைவரானார். கணங்கள் குதிரைக்காரரானார்கள். ஆவணிமூலத்தன்று காலையிலே அந்தக் குதிரைகளையெல்லாம் அரசனிடம் ஒப்புக்கொடுத்து மீண்டார். அரசன், மணிவாசகரைச் சிறைநீக்கினான். எனினும், பரிகள் யாவும் அன்றிரவே நரிகளாயின.

### வந்திக்கு அருள்புரிதலாகிய திருவிளையாடல்:

மறுநாள் அரசன், மணிவாசகரை மாயைக்காரர் எனக் கருதிச் சினந்தான். அடிகளாரை வைகை நதிச் சுடுமணலிலே நிறுத்தித் துன்புறுத்தினான். கருணைவெள்ளத்தனாகிய சிவபெருமான் வைகையில் திடீரென்று தமது கங்கைப் பெருவெள்ளத்தைப் பெருகி ஓடச்செய்தார். வேகவதி மதுரைநகருள் புகலுற்றது. வாதவூரரால் இவ்விளைவு நேரிட்டதென

மன்னன் எண்ணி அவரை விடுவித்தான். வெள்ளம் சற்றுத் தணியலுற்றது. அரசன், மதுரைக் குடி மக்களை அவரவர்க்குப் பங்கு குறித்து வைகைக் கரையை அடைக்கக் கட்டளையிட்டான். எல்லாருடைய பங்கும் அடைபட்டும், அவ்வூர் வந்தி என்னும் பிட்டுவாணிச்சி பங்கு அடைக்கப்படவில்லை. அவளுக்கு வேலைசெய்ய ஆள் அகப்படாமையால் அரனை வேண்டினாள். இறைவனே கூலியாளானான். அவள் தந்த பிட்டுணவை உண்டும் வேலைசெய்யாமல் காலம் போக்கினார். பாண்டியன், அந்த ஆளைக் கோபித்து முதுகில் பிரம்பால் அடித்தான். அந்த அடி எல்லா உயிர்களின் முதுகிலும்பட்டது. அரசனுக்கும்பட்டது. கூலி ஆளாக வந்தவர் உடைப்பில் மண்ணைக்கொட்டி மறைந்தார். பாண்டியனுக்கு உண்மை புலப்படலுற்றது. மணிவாசகரை வணங்கி விடைகொடுத்தனுப்பிவிட்டான். மணிவாசகர், மந்திரிபதவி நீங்கியவராய்த் திருப்பெருந்துறைக்கு மீண்டார். பாண்டியனும் பரமனருளையே நினைந்து போற்றியிருந்தான்.

தலயாத்திரை :

வாதவூரர், திருப்பெருந்துறை போந்து குருநாதரை அவரது அடியார் குழாத்தோடும் தரிசித்து என்பெலாம்கரைய ஆனந்தக் களிப்புற்றுப் பரவினார். இறைவன், ஆங்குள்ள குளத்தில் செழுஞ்சோதி தோற்றுவித்துத் தமது குழாங்களை அச்சோதியுட் புகுமாறு செய்தருளினான். மணிவாசகரைப் பல தலங்களையும் தரிசித்துச் சிவானுபவம் மேலிடப்பெற்றுக் கடைசியாக "நலமலி தில்லையுள் கோலமார்தரு பொதுவினில் வந்தடைக" எனக் கட்டளையிட்டு

மறைந்தார் இறைவர். பரமன் பணித்தவாறே வாத வூரர் உத்தரகோசமங்கை, கல்லாடம், மதுரை,காஞ்சி, திருக்கழுக்குன்றம், திருவண்ணுமலை, திருக்கயிலை முதலிய தலங்களையெல்லாம் தரிசித்தனர். பல தலங் களிலும் காணப்படும் சிவமூர்த்தங்கள் யாவும், தமக் குத் திருவருள்புரிந்த ஞானசாரியராகிய சிவபெரு மானே எனத் தெளிந்தனர். இதனுல் பக்தி அளவு கடந்து அதிகரிக்கப்பெற்றனர். ஆடவரேயன்றி, மகளிரும் சிறுமியரும் இந்த அன்புநெறியில் ஈடுபட்டு இன்புறவேண்டுமென்று அடிகள் கருதினர். இதற் கான பலவகைப் பாடல்களும் பாடினர். சிவனே பரம்பொருள் என்பதைப் பலவகைப் புராணக் கதை களாலும், தமது சொந்த அநுபவவிஷயங்களாலும் பாடல்கள் இயற்றி நிலைநாட்டினர். அன்புநெறியின் (ஞானநெறியின்) சிறப்பையும், சிவபெருமான் அன் புக்கு எளிதின் அருள்புரிதலையும் அறியச்செய்தற் பொருட்டுக் கண்ணப்பநாயனுர், சண்டேசுவரர்களு டைய வரலாறுகளைச் சான்றுகாட்டிப் பரவும் பாடல் களையும் பாடியருளினர்.

இவ்வாறு தலந்தோறும் தரிசித்துக்கொண்டே சோழநாட்டுத் திருப்பதிகளில் பலவற்றையும் பரவ லாயினர். திருவாரூர் முதலிய தலங்கட்குச் சென்று பரவினர். இப்படியாகத் திருவிடைமருதூர் மேவினர். அங்குத் திருவடி தரிசனம் எய்தினர். அப்பால், மாசிலாமணியீசுவரர் அரசடியிலே எழுந்தருளியுள்ள தும், திருமூலர் முதலான தவயோகச் சித்தர்கள் சித்திபெற்ற தலமாகவுள்ளதும், அடைந்தார் பசுத்து வத்தை அறவே ஒழிக்கும் தன்மையுள்ளதும், விடை யினுலய விசேடமுடையதாக உள்ளதும், ஞானிகளின்

இருப்பிடமாக உள்ளதுமான கோகழி எனப்படும் திருவாவடுதுறை அடைந்து, முன்னம் திருப்பெருந் துறையில் நிகழ்ந்தமைபோலவே இங்கு அரசடியிற் குருமணியால் சூக்கும பஞ்சாக்கர உபதேசம் பெற்ற னர். "சோதியே சுடரே" எனப் பரவினர். தொழுது எழுந்து ஆடிப்பாடித் தோத்திரம் சொல்லி அழு தனர். இதுகாறும் கூறிவந்த தூல ஐந்தெழுத்து அருமறையினை மாற்றிப் போற்றினர். பெரிய அன்ப ராயினர். தன்னை மறந்தார். தலைப்பட்டார் தில்லைத் தலைவராகிய நடராஜப்பெருமானை நாடி. தில்லைப் புறத்தே ஓரிடத்தே வதியலுற்றார். "இவ்விதம் இருந்து சின்னாள் மாசிலா மணியை ஏத்தித், திவ்விய ஞானச் செல்வச் சீரெலாம் அருளப் பெற்று நவ்விசேர் அங்கைநாதன் நல்விடை பெற்றுப் போந்து, மெய் வளர் சிதம்பரத்தின், மேவிநல்ஆடல் கண்டு" என்பது இச்செய்திக்குரிய திருவாவடுதுறைப் புராணப்பாடல் ஆகும்.

**மதவாதம் :**

அடிகள், தில்லையம்பதியில் எழுந்தருளி முத்தி பஞ்சாக்கரமுறையில் நின்று நிட்டைகூடி வருகையில், "பொன்னம்பலம்" என்ற பேச்சுக் கேட்கப்பொறாத புத்தர்களுடனும், தன் மூங்கைமகளுடனும், இல்லா ளோடும் ஈழநாட்டு மன்னன் ஒருவன் தில்லையம்பதி போந்தான். புத்தமதத்தைப் பரவச்செய்யும் நோக் குடன் அங்குள்ளாரை வாதுக்கழைத்தான். கூத்தப் பிரான் திருவருளால் மாணிக்கவாசகசுவாமிகள் புத்த குருமார்களோடு வாதிட்டு வென்றார். புத்தர்கள் ஊமையராயினர். பின்பு புத்தமன்னன் வேண்டு

கோளின்பேரில் அவனது மூங்கைமகளைப் பேசவைத்தனர். திருச்சாழற்பதிகம் இச்செய்தி செப்புவதாகும். பிறகு, யாவரையும் சைவராக்கிப் பேசவைத்தனர். இங்ஙனம், பவுத்தமதத்துக்குத் தென்னாட்டிலிருந்த செல்வாக்கு நம்சுவாமிகளால் போக்கப்பட்டது. சைவ சமயத்தின் உண்மைகள்நிலைநாட்டப்பட்டன. இவரால் உண்மைச்சமயத்தெளிவு அந்நாளைய யாவர்க்கும் புலப்படலானது.

## திருவாசகம் - திருக்கோவையார் :

இங்ஙனம், அடிகளார் பரமானந்த நிட்டையினராய்த் தில்லையெல்லையில் இருக்கையில், இவரது சிறப்பையும், ஞானமார்க்கத்தின் பெருமையையும் இருவகை அறத்திலருக்கும் உணர்த்த எண்ணிய சிவபெருமான், ஓரந்தணராக உருக்கொண்டு அடிகளிடம் அணுகித் தான் பாண்டிநாட்டான் எனக் கூறித் திருவாசகமுழுமையும் சொல்வித்து எழுதிக் கொண்டனர். பிறகு சிவானந்த அனுபவம் விளங்குதற் பொருட்டுக் கோவைநூலொன்றும் பாடுவித்துத் திருக்கோவையார்நூலையும் எழுதிக்கொண்டனர். இவ்வேட்டுப் பிரதியின் முடிவில் "மாணிக்கவாசகன் சொல்ல அழகிய சிற்றம்பலமுடையார் எழுதியது" எனக் கைச்சாத்துவைத்துச் சிற்சபையின் பஞ்சாக்கரப்படியிலே ஒருவருங்காணுமே இட்டு மறைந்தனர். இதனை வைகறையில் பூசனைக்குப்போந்த தில்லைவாழந்தணர்கள் கண்டு, ஏடுகளை அவிழ்த்துநோக்கி, அம்பலவாணர் கையொப்பம் இருத்தலை அறிந்து மகிழ்ந்து, அனைவரும் அடிகளிருப்பிடம் சென்று, " சொல்லிய பாட்டின் பொருள் " கூறுமாறு

வேண்டினர். மணிவாசகப்பெருமான், அவ் எல்லா ருடனும் சிற்சபைமேவி, அனைவரும் காணுமாறு, "இப்பாட்டுகளின் பொருளாவது அம்பலவாணர் அடியிணையே" எனச் சுட்டிக்காட்டி இறைவன் திருவடியில் ஆனிமா மகத்திலே இரண்டறக்கலந்தார். இங்ஙனம்; இறைவனால், மணிவாசகரிடமாகப் பிறப்பிக்கப்பட்ட பெருமைவாய்ந்தது எட்டாந்திருமுறையதாகிய திருவாசக நூலும் திருக்கோவையாரும்.

**பிறசிலகுறிப்புகள் :**

அடிகள் வரலாற்றைத் திருஉத்தரகோசமங்கைப் புராணம் முதலிய சிற்சில புராணங்களைக்கொண்டு அறியலாம். இப்புராணங்கள் கூறும் செய்திகளில் வேறுபாடுகள் உண்டு. அடிகள் அவதரித்த ஊர், திருவாதவூர் என்பதில் மாறுபாடு இல்லை.

> " வாத வூரினில் வந்தினி தருளிப்
> பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும் "

என அடிகள், வாதவூரில், தாம் சிவபாதச் சிலம்பொலி கேட்கப் பெற்றதாகக் கூறியருளுகின்றார். ஞானநாட்டம் கொண்ட அடிகள், ஊனநாட்டம் அடையாவண்ணம் இச்சிலம்புநாதம் அறிவுறுத்தியது என்னலாம். சிலம்பொலி, ஞானவிளைவுக்கு ஏதுவாம். "ஆதரவடியார் முற்றும்... துதிக்கலுற்றார்" என்னும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் பாடல் இங்குக் காண்டல் தக்கதாகும். வாதவூர்ச் செய்தியை அடுத்தே திருப்பெருந்துறைச் செய்தி, கீர்த்தித் திருவகவலில் பேசப்படுகின்றது. நாத வெளிப்பாட்டின் பின்னர் நாதன்வெளிப்பாடு நிகழப் பெற்றமை இதனால் அறியலாம். நரி, பரிகளாக்கிக்

கொணரப்பட்ட செய்தி, அடிகளால், "நரியைக் குதிரைப் பரியாக்கி" முதலிய அடிகளால் விளக்க முறக் கூறப்பட்டுள்ளது.

திருவாதவூரர் பாடிய பதிகங்களின் முறை வைப்புபற்றிய வேறுபாடுகளைப் பிற வரலாறுகளால் அறியலாகும். எல்லா வரலாறுகளும் ஒருபடியாகத் திருவாசகமும் திருக்கோவையாரும் தில்லையிலே பாடப்பட்டன என்பதையும் கருதிப்பார்த்தல் தகும். சிற்சிலர், திருக்கோவையாரை அடிகள் பாடிலரென வும், அடிகள்போன்றுரொருவர் பிற்காலத்தே பாடின ரெனவும் பேசுவர். திருக்கோவையாரில் 300 ஆம் பாடலில் "இருந்துதி என்வயிற் கொண்டவன் - யான் எப்பொழுதும் உன்னும் மருந்து" என்று கூறி யிருத்தல், அடிகள் திருவாசகத் துதிப்பாக்களைப் பாடிய பின்னர், திருக்கோவையாரைப் பாடலுற்றார் எனவும், ஒருகோவையாக இருநூல்களையும் இறை வனை இமைப்பொழுதும் மறவாதே தம் நெஞ்சில் எண்ணியிருந்த ஒரே நினைவிலே தொடர்ந்து பாட லுற்றார் எனவும் நம்மை நினைக்கவைக்கின்றன என்னலாம். மற்றும், திருக்கோவையாருக்கும் திரு வாசகத்துக்கும் உள்ள சொற்றெடர் ஒற்றுமை, கருத்து ஒற்றுமை, முடிபுப்பொருள் ஒற்றுமை முதலிய பலபட்ட ஒருமைப்பாடுகளையும் அறிஞர்கள் எடுத்துக்காட்டி ஒருவரே பாடிய நூல்கள் இவை இரண்டும் என்பதும் காணலாம். திருவாசகத்தே கூறப்பட்ட தலங்கள் பல, திருக்கோவையாருள்ளும் பாடப்பட்டுள்ளமை இவ்வொற்றுமையை வலியுறுத் தும். கோகழியைத் திருவாவடுதுறைஎனக்கொள்ளத் திருவாசகம் தூண்டுதல்போல, கோவையாரிலும்

அரசம்பலம் என்றசொற்றொடர்நின்று தில்லை, பேரூர் என்பனவற்றோடு அரசு தலவிருட்சமாக உள்ள திருவாவடுதுறையை எண்ணும்படித் தூண்டுதல் காணலாகும்.

உலகத்து மக்கள் இல்லறம், துறவறம் என்னும் இருநெறி வழியுள் ஒன்றைப்பற்றியே ஒழுகுவர். ஆதலால், இல்லறநெறி நிற்பாருக்குத் திருக் கோவையார் மூலமாகவும், துறவறநெறி நிற்பார்க்குத் திருவாசகம் மூலமாகவும் அடிகள் ஞானநெறி உணர்த்தியுள்ளார் எனவும் தகும். இதனால் இரு வகையினரையும் அடிகளார் உய்தி கூறுதற்கண் மறந்திலர் என்னலாம். மேற்குறித்த இருநூல் களையும் ஒரு தொடராகவே கொள்ளின், ஆசாரி யரைத் தேடி உபதேசங்கொள்ளுதலைத் திருவாசக மும், அவ்வழியில் பழகுதல்முறையைத் திருக்கோவை யாரின் களவுப்பகுதியும், உபதேசப்பயனடைந்தனுப வித்தலை அந்நூலின் கற்புப்பகுதியும் கூறி முடிக் கின்றன எனவுங்கூடும். வேறு வேறு நூல்களாகக் கொள்ளின், தன்னைத் தலைவியாகவும், சிவபெரு மானைத் தலைவனாகவும் கொண்டனுபவிக்கும் ஞான நெறியின் ஒருகூற்றினைத் திருவாசகந்தாலும், சிவத் தைத் தலைவியாகவும், தன்னைத் தலைவனாகவும் கொண்டனுபவிக்கும் பிறிதொரு ஞானப்பகுதியைத் திருக்கோவையார் நூலாலும் அடிகள் கூறிக்காட்டி யுள்ளார் எனினும் பொருந்தலாம். பின் கூறப்பட் டுள்ள அனுபவநிலை ஞானிகள் கூறிக்காட்டும் இயல் புடையதே. பிற்காலக்கவியான பாரதியாரும் கண்ண னைத் தன் மனைவி எனக் கூறிக்காட்டுதல் காணலாம்.

எவ்வாறேனும், இருநூல்களையும் ஒருவரே பாடியன வாகக் கோடல் சிறப்புடையதாகும். மொழிப்பூசலை ஒழித்துக்கட்டுவதுபோல, வடமொழியால் வேதாகமங்களை அருளிச்செய்த பரமன், தமிழ்மொழியால் மணிவாசகர் பாடிய திருவாசகம், திருக்கோவையாரை ஏற்று எழுதிக்கொண்ட செய்தி அமைந்திருத்தல் காணலாம்.

இனி, அடிகள்காலத்தைப் பற்றியும் பல்வேறு கருத்துக்கள் உலவிவருகின்றன. ஆராய்ச்சிக்கு இது நல்விருந்தாகப் பயன்படும். எல்லாருடைய கருத்தையும் தொகுத்துரைத்தால் அடிகள் காலம் மூவர் காலத்துக்கு முந்தியதா? அன்றிப் பிந்தியதா? என்பதில் வந்து நிற்கும். முந்தியதென்பதே பலர் துணிபு. வரகுணன் என்ற அரசன் பெயர் திருக்கோவையாரில் குறிக்கப்படுதலால் கி - பி. ஒன்பதாம் நூற்றுண்டினராவர் அடிகள் என்பாரும் உளர். பாண்டியவமிசாவளியில் அரிமர்த்தனனுக்கு முந்தியே ஒரு வரகுணன் இருந்தமை பேசப்படுகிறது. இவன் சிவலோகம் கண்ட சிறப்புடையவன் என்பர். சிவலோக நாட்டத்தை வலியுறுத்தும் அடிகள் இம்முந்திய வரகுணனைப்பற்றி அறியப்பெற்றவராதலால் இம்மன்னனைச் சிறப்பாகக் கூறினுர் எனலும் கருதத்தகும். திருவாசகத்தே,

> "நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
> பரகதி பாண்டியர்க் கருளினை"

என்று குறிப்பிடுதல் இம்முந்திய வரகுணனைப்பற்றிய குறிப்புடையதாகலாம். மற்றும், தேவார ஆசிரியர்கள் வாக்கிலும் அடிகளார் வரலாறு குறிக்கும்

பகுதிகள் இடம் பெற்றுள்ளமை, "நரியைக் குதிரை செய்வானும்"; "அணியார் வையைத் திருக்கோட்டினின்றதோர் திறமும் தோன்றும்"; "அலந்து பாடும் அற்றவர்க்கன்பர் போலும் ஆவடு துறையனாரே"; "அழுமவர்க் கன்பர் போலும் ஆவடு துறையனாரே"; "புத்தரும் ... புறனுரைக்கப் பத்தர்கட்கு அருள் செய்து பயின்றவனே" என்பனவற்றால் அறியலாகும். "கழுமலமதனில் காட்சி கொடுத்தும்"; "ஒருதோழன் தொண்டருளன்" என அடிகள் கூறுமவை அவற்றின் உரைகளால் தேவார ஆசிரியர்களை நேரே குறியாமை காட்டுவதுகொண்டு, அவ்வாசிரியர்கட்கு முன்னவரே அடிகள் என்பர். கல்லாடத்தில் கூறப்படும் வரலாறும் காணத்தக்கதே. எவ்வாறாயினும், நாம் அடிகளார்காலம்பற்றிய ஆய்வால் அடையப் போகும் பயன் ஏதுமில்லை. அவர்கள் அருளிச்செய்த ஞானநெறியினை எக்காலத்திலும் பற்றி ஒழுகலாம். காலக்கோளுக்கு உட்பட்டுள்ள நம்மனோர் கடமை அதுவேயாம்.

முடிபுரை :

பொதுப்பட நோக்கினால் நம் அடிகள் இளமை தொட்டே ஞானநெறியில் இறைவனை அடைய முயன்றவர் என்பது காணலாகும். இதற்கு ஆசாரியர் அருள் தேவை என்பதை இவர் வரலாறு வலியுறுத்தும் தகையது. வாதவூரில் சிலம்பொலிகேட்டு, உத்தரகோசமங்கையில் சிவநெறித்திறம்கண்டு, திருப்பெருந்துறையிலே ஆசாரியரருள்பெற்றுத் தூலபஞ்சாக்கர நெறி உணர்ந்து, கோகழியிலே (திருவாவடுதுறையிலே) சூக்குமபஞ்சாக்கர உபதேசம்பெற்று அந்நெறி

மேற்கொண்டு, தில்லையம்பதியிலே முத்திபஞ்சாக்கர நெறியிலே நின்று சிவானந்தப்பேறெய்தினார் அடிகளார் என்பது பொதுவான வரலாறுகும். பண்டாய நான்மறைப்பாடல் ஐந்தாவதில் பெருந்துறை கோகழி உத்தரகோசமங்கை என்ற மூன்று தலங்களும் வேறு வேறிடமெனப்படுமாறு கூறப்பட்டிருத்தல் காணலாம். "பெருநெறி காட்டாய்" என்று திருப்பெருந்துறையிலே வேண்டிக்கொண்ட அடிகளார்க்கு அதன்பின்னர், கோகழியிலே அந்நெறி உபதேசிக்கப் பட்டமையால்,

"கோகழிஎங் கோமாற்கு நெஞ்சமே!
உண்டோ கைம்மாறு உரை"

என்று அடிகளால் நன்றியுரை கூறப்பட்டுள்ளது என்னலாம். மற்றும், கோகழித்தலத்துப் பெருமான் திருப்பெயரை "மாசில்மணியின் மணிவார்த்தை" என்ற சொற்றொடரில் அமையச்செய்தும் அடிகள் கூறியிருத்தல் காணத்தகும். இங்கு அப்பெருமான் 'இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டி'ஞறுதலால், 'பேச்சிறந்த மாசில்மணி' என்றும் கூறியுவக்கின்றார் எனலும் தகும்.

பின்னர், அடிகளார், தில்லையில் தாம், கோகழி நாதன் குறித்தவழியே ஒழுகியதை விண்ணப்பிக்கையிலும்,

"முன்னின் றாண்டாய் எனைமுன்னம்
யானும் அதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின்றேன்"

என்று கூறிக்காட்டுதலும் ஓர்தல் தகும். தில்லைக்கு முன் உபதேசம் பெற்றமை கோகழியிலாகும் எனக் கோடல் கூடும். மற்றும், தில்லையில் முத்திபஞ்சாக்கர நெறியில் தாம் இருக்கநேரிட்ட சிறப்பினை, "உடையாளுன்றன் நடுவிருக்கும்" என்ற பாடலால் அடிகள் கூறிவியத்தல் முறைமையான சற்காரியப்பேறு தெரிவிக்கும் இயல்பினதாகும் என்னலாம்.

அடிகள் பதினாறுண்டளவும் திருவாதவூரில் இருந்து, பின்னர், மதுரையிலே பேரமைச்சராகச் சில ஆண்டுகளளவும் பணியாற்றிப் பின்னர், சில ஆண்டுகள் தலயாத்திரை மேற்கொண்டு ஒழுகி, அப்பால் தில்லையம்பதியினை அடையப்பெற்றுத் தமது முப்பத்திரண்டாம் ஆண்டளவிலே முத்திப் பேறெய்தினர் எனத் தெரியலாம். தில்லையில் இவர்கள் நான்காண்டுகால்ம் எழுந்தருளியிருந்தனர் என்பது செவிவழிப்பேச்சு ஆகும். இதுகாறும் ஓரளவு திருவாதவூரருடைய வாழ்க்கை வரலாறு தொகுத்துரைக்கப்பட்டது. இதனால், நாம் அன்பு செலுத்தி அருளைவாங்கி ஞானப்பேறு எய்துதல் வேண்டும் என்பது தெளியலாம்.

இனி, அடுத்த அத்தியாயத்திலே, நம் திருவாதவூரர் வாழ்க்கை சிவபோத வாழ்க்கையாகவே (சிவஞானபோதம் கூறும் ஞானமார்க்க வாழ்க்கையாகவே) அமையப்பெற்றிருத்தலை இயன்ற அளவு ஆராய்வோமாக!

**மாசில் மணியின் மலர்ப்பதம் போற்றி!**

திருப்பெருந்துறையில்:



அருபரத்தொருவன் அவனியில் வந்து குருபரனாகி அருளிய காட்சி

## மூன்றும் அத்தியாயம்

## ஸ்ரீ மாணிக்கவாசகர்

# சிவபோதவாழ்க்கை

"உள்ளமாகிய புலத்தினைப் பத்தியா லுழுது
தெள்ளு ஞானவித் துறுத்துநற் சிரத்தைநீர் பாய்த்திக்
கள்ள வான்பொறி களைகள்கட் டானந்தம் விளைத்துக்
கொள்ளை கூறுமா ணிக்கவா சகன்கழல் குறிப்பாம்"

—பேரூர்ப்புராணம்.

## 1. சிவபோதவாழ்வின் பொதுஇயல்

### தொடக்கம்:

*இதுவரையில், முதல் அத்தியாயத்தால் சிவ போதவாழ்வென்பது எத்தகையதென்பதும், இரண்டாம் அத்தியாயத்தால் அவ்வாழ்க்கையை நமக்கெல்லாம் உணர்த்துமாறு திருவவதரித்தருளிய திருவாதவூரர் சரிதச்சுருக்கமும் ஒருவாறு உரைக்கப்பட்டன. இந்த அத்தியாயத்தில், நம்சுவாமிகள், மேற்கூறப்பட்ட சிவபோதவாழ்வுமுறையிலேயே தம்முடைய வாழ்க்கையை நடத்தி நம்மனோர்க்குச் சித்தாந்தம் செப்பும் ஞானநன்னெறியினை எங்ஙனம் நிதரிசனம் செய்தருளினர் என்பது இயன்றளவு கூறப்படுகிறது. ஆதலால், இச்சுவாமிகளுடைய இவ்விதமான சிறப்புடைய வாழ்க்கையே சரியையாதி நான்கு நெறிகளுள் நான்காவதாகிய ஞானமார்க்கத்துக்குச் சான்றாக அமைந்திருப்பதாகும். ஞானமார்க்கம் வேதாகமங்களாதி சாத்திரங்களிலே கூறப்பட்டுள்ளது.*

என்றாலும், இந்தமார்க்கத்தினைத் தெளிவாகவும், எளிமையாகவும், முரண்பாடு இல்லாமலும் ஸ்ரீ மெய் கண்டதேவநாயனார், சிவஞானபோதம் எனப்படும் சித்தாந்தசாத்திரத்திலே விளக்கியருளியுள்ளார்கள். இலக்கியங்கண்டு அதற்கு இலக்கணம் வகுப்பது போல உள்ளது மெய்கண்டசாத்திரம். அதற்குரிய இலக்கியம்போலத் திகழ்வது ஸ்ரீ மாணிக்கவாசகர் வாழ்வும், அவர் அருளிச்செய்துள்ள எட்டாந்திரு முறைப் பனுவல்களும் என்னலாம்.

பொதுப்பட நோக்கின் சிவஞானபோதநூல், பொதுவும் சிறப்புமாகிய இரு பிரிவுகளைப் பெற்றுள் ளது. இங்ஙனமே, நம் சுவாமிகளுடைய வாழ்க்கையும் குருந்தடியில் குருவெளிப்பாட்டுக்கு முந்தியதான உலகியலும், அதன்பிந்தியதான ஞானஇயலும் என்ற இரண்டு பகுப்புற்று நடப்பதைக் காணலாம். மற்றும் இவர் இருபிறப்பாளர் எனப்படுவதும் அவருடைய இருதிறப்பட்ட வாழ்வினை நினைவூட்ட வல்லதாகும். மேலும், சுவாமிகள் அருளிச்செய்துள்ள நூல்களும் இரண்டேயாகும் என்பது தெரிந்தசெய்தியே. அவை, திருவாசகமும் திருக்கோவையாரும் ஆம். இவைகளில் ஒன்று சாதனத்தையும், ஒன்று பயனையும் கூறுவன போன்று அமைந்திருத்தல் உய்த்துணர்வார்க்குப் புலப்படும். அன்றியும், ஒவ்வொருநூலையும் தனித் தனியாகக் கொள்ளினும், திருவாசகத்தே அகவலா னியன்ற பகுதி வேதங்களின் முறைமையினில் நின்று கடவுளுண்மையைத் தெரிவிப்பதாகவும், பிற பகுதிப் பாடல்கள் யாவும் ஒருசேர நின்று அக்கடவுளடைவு குறித்து விளங்க உரைக்கும் சாத்திர நெறியினை உணர்த்துவதாகவும் ஆக இரண்டே வகைகளில்

நடப்பது காணலாம். திருக்கோவையாரைக் கொள்ளின், அதனினும், களவுக்குரிய கிளவிகள் யாவும் ஒருமுகமாகக் கடவுட்காட்சியினையும், கற்புப்பகுதிப் பாடல்கள் யாவும் கடவுளை அடைந்து சுகிக்கும் தன்மைபற்றியவற்றையும் ஆக இரண்டே பிரிவு பற்றியதாகச் செல்வதைக்காணலாகும். பொதுப்பட நோக்கின் திருவாசகம், சிவஞானபோத சாத்திரம் குறிக்கின்ற ஆதி இன்னபொருள்தான் என்பதை நமச்சிவாய எனச்சொல்லிச் செல்வதையும், சிவஞான போத சாத்திரம் இறுதிச்சூத்திரத்திலே இம்மையின் ஊதியம் மலங்கழுவி அரனடி தொழுதலே என எடுத்துரைப்பதுபோன்றே, திருக்கோவையாரின் இறுதிப் பாடலும் ஊடல்தீர்ந்து தில்லைச் சிவனடிக்குத் தாரணி கொன்றையனும் தலைவனைக் கூடுதலையே ஊதியமாக எடுத்துரைத்து முடிப்பதையும் நாம் காணலாகும். எனவே, எட்டாந்திருமுறையின் இருநூல்களின் பொதுப்போக்கும் நோக்கும், சிவஞானபோதநூலின் பன்னிரு சூத்திரங்களின் போக்கும் நோக்கும் ஒருபடித்தாகக் கிடப்பன எனக் கொள்ளுதல் முறையே ஆகும் என்னலாம்.

ஸ்ரீ மெய்கண்டதேவர், வேதமாகிய பசுவின் பாலிலிருந்து எடுக்கப்பட்ட நெய்யை நிகர்க்குமாறு தமது ஞானசாத்திரத்தைச் செய்தருளித் தமது நூல், வேதத்தோடு உடன்பாடுடையதை நாட்டியுள்ளார். அவ்வாறே நம்சுவாமிகளும், தமது நூலினை வேதசாரமாகவே இயற்றப்பட்டதெனத் தெரிவிக்குமாறு நான்கு வேதங்களின் கொள்கைகளையும் திருவாசக முகப்பில் நான்கு நெடும் பாக்களாக அருளிச்செய்து, பின்னர் அவற்றின் விரிவுபோலும்

ஏனைய பாக்களையும் பாடியுள்ளமை காணலாகும். இந்த நான்கு பாக்களும் பொதுவாக, இறையுண்மை கூறி, அதனோடு இறைவன் உருவத்திருமேனி உடையனாகக் கூறப்படினும் அசிந்திதனே என நான் மறை நவிலும் முறையிலே கூறுதல் தெரியலாம். சிவஞானசித்தியாரிலே, "உலகினை இறந்து நின்றது அரன்உரு என்பது ஓரார் - உலகவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓரார் - உலகினுக்கு உயிரும் ஆகி, உலகுமாய் நின்றது ஓரார் - உலகினில் ஒருவன் என்பர் உருவினை உணரார் எல்லாம்" என்று சுருதி நான்கின் திரள்பொருள் கூறப்படுகிறது. "குணபூதா பராசக்திஸ் ததாசிரய குணீ சிவ:" என்பது காலோத்தரம். இக்கருத்தை நமக்குச் சுருதி வழியே கூறுமுகமாக முதலில் சிவபுராணத்திலே உருத்திரன் (சிவன்) உலக அதீதன் என்பதை நம் சுவாமிகள் வெளியிடுகின்றார்கள். இப்பகுதியிலே **'நாதன்'** என்றும், **'மண்ணிறைந்து மிக்காய்'** என்றும், **'வேதங்கள் ஐயா என ஓங்கி'** என்றும், **'ஆதியனே'** என்றும், **'சொலற்கு அரியான்'** என்றும் சுவாமிகள் கூறிக் காட்டியிருத்தலால் நாம், "புருஷோவை ருத்ர: சந்மஹோ நமோ நம:" என்கிற இருக்குவேதக் கருத்துப் பொதுளுதல் காணலாம்.

மற்றும், இச்சிவபுராணத்து இறுதியிலே "ததா வித்வாந் புண்யபாவே விதூய நிரஞ்சந: பரமம் சாம்யமுபைதி" என்னும் முண்டக உபநிஷத்தின் கூற்றுக்கு ஏற்ப, "பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் (அல்லற் பிறவி அறுக்கப்பெற்று) செல்வர் சிவன் அடிக்கீழ்" என்று உறுதியுரைத் திருத்தலும் கருதத்தக்கதாகும்.

இனி, உலகம் அவ்விறைவன் திருவுருவில் தோன்றி ஒடுங்குமாதலால் சிவனே உலககாரணன் என்கிறது யசுர் வேதப்பொருள் என்பர். இதனால், சிவத்தினை, உலகின் முதற்காரணப்பொருள் என மயங்கினாரும் உண்டு. அம்மயக்கம் நீங்குமாறு சிவம் நிமித்தகாரணம் என்பது விளங்கும்வண்ணம், "ய ஏஷோந்தர் ஹிருதய ஆகாசஸ் தஸ்மிஞ்சேதே சர்வஸ்ய வசீ சர்வஸ்யேசாந: சர்வஸ்யாதிபதி:" என்னும் பிருகதராணிய வாசகத்துக்கு இணங்குமாறு, "தில்லை மூதூர் ஆடிய சேவடி" எனவும், "உள்ளத்து அன்புமீதூரக் குடியாகக்கொண்டு கொள்கை" என வும், "இறைவன் ... ஒலிதரு கயிலை உயர் கிழவோன்" எனவும் அருளிச்செய்து, எல்லாம் அவன் செயல் என்பதற்கான பல சான்றுகளும் தந்து, அவன் ஆட்ட உலகம் ஆடுதலைத் தமது இரண்டாம் அகவலான கீர்த்தித்திருஅகவலின்மூலம் வெளியிட் டிருத்தல் நோக்குதற்குரியதாம். இதனால் சிவனே, உலககாரணன் என்பது நிரூபிக்கப்படுகின்றதென்க.

மேலும், இறைவன், உலகிற்கு உயிராய் (அதா வது) அந்தரியாமியாய் நிற்கிறான் என்பது சாமத்துத் திரள்பொருள் என்ப. இந்த விசுவாந்தரியாமியாம் கருத்தே நமது சுவாமிகளால் திருவண்டப்பகுதி அகவலில் காரண காரிய முறையோடு தரப்படு கின்றது. "சிறியவாகப் பெரியோன்" எனவும், "ஒரு வன் என்னும் ஒருவன்" எனவும், "பூவில் நாற்றம் போன்று" எனவும், "ஒளிக்கும் சோரன்" எனவும், "சிவன் என யானும் தேறினன்" எனவும், "பிரமன் மால் அறியாப் பெற்றியோன்" எனவும், "மயா வியாப்தமிதம் சர்வம் திருச்யா திருச்யம் சராசரம் -

அஹமேவ ஜகந்நாதோ மத்தஸ் சர்வம் பிரவர்த்ததே - அஹமேவ பரப்பிரம்ம அஹம் ஞேயமக்ஷரம்'' என்கிற சர்வஞ்ஞாதேத்தரத்தினுக்கிணங்கக் கூறப்படுதலும் அறிதற்குரியதாம். "ஏகமேவாத்விதீயம்'' என்பதன் கருத்தும் இத்திருவண்டப்பகுதி அகவலில் கூறப்படுதல் அறியற்பாலதே.

இனி, முடிவாகப் போற்றி முடிக்கும் போற்றித் திருவகவலில் நம் சுவாமிகள், நான்மறையின் நான்காவதான அதர்வண வேதத்தின் திரண்ட கருத்தாகிய உலகரூபி என்கிற தத்துவத்தை வெளியிட்டுக் கூறுகிறாரவர். "சராசராதி ஜந்தூநாம் சிவைக: பிராண உச்யதே'' என்ற சுருதியும் இங்குக் கருதுதல் நன்றும். "பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி"; "அண்ணுமலை எம் அண்ணு போற்றி"; "இலங்கு சுடர் எம் ஈசா போற்றி"; "அருவமும் உருவமும் ஆனுய் போற்றி"; "அடியொடு நடு ஈறு ஆனுய் போற்றி"; "ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி'' முதலிய நான்காம் அகவற்பகுதிகள் மேற்குறித்த கருத்துக்கு உறுதுணை ஆகும்.

இதுகாறும் கூறியவற்றுல் திருவாதவூரர்வாக்கு, சிவஞானபோதம் போன்றே வேத வேதாந்தங்களுடன் முரண்பாடில்லாத தமிழால் அமைந்த உபநிடதம் என்னத் தடையில்லை.

## கடவுளுண்மை அறிதல் :

ஸ்ரீ மெய்கண்டதேவர், நமக்கெல்லாம் கடவுள் ஒருவர் உண்டெனவும், அவர் சங்காரக்கடவுள் ஆகிய

சிவமே எனவும், உயிர்கள் ஆணவமலம் உடைமை யால் உலகம் ஒடுங்கி மீளத்தோன்றி வருகிறது என்றும் முதற்சூத்திரத்திலே நமக்குப் போதித் தருளுகின்றார். சிவபோத வாழ்விலே புக விரும்பு வோர்க்கு இதில் உறுதியான எண்ணம் இருந்தாக வேண்டும். கடவுளர் பலர் எனவும், அவர்களுள் ஒருவரே சிறப்புடையர் எனவும், உலகம் தானாகவே தோன்றி மறைதலால் இது இயற்கையின் செயல் எனவும், ஆணவமலம் என்பதொன்று கிடையாது எனவும் இப்படியெல்லாம் விபரீத அறிவு இருப்பின் சிவபோதவாழ்வுக்கு உரியவராகமாட்டார். ஆதலால், நம் அடிகள்வாழ்வில் மேற்கூறப்பட்ட உறுதிகளான அடிப்படை அமைந்துள்ளது. நாத்திக நிலைகளெல் லாம் கடந்தபிறகு தன்னாலாவது எதுவும் இல்லை என்ற எண்ணம் உதிக்கப்பெறும். இதன்பயனாகத் தெய்வநம்பிக்கை உண்டாகும். இதனைத் "தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி" எனக்கூறிக் காட்டி யுள்ளார் அநுபவமுறையில் நம் அடிகள். அத்தகைய தெய்வமே உலகுக்கு மூலகாரணமானவன் என்ப தைக் "கருவாய் உலகினுக்கு அப்புறமாய் இப்புறத் தே...வந்தருளி" என்பதால்கூறியுணர்த்துதல் தெரி விக்கும். அப்பரம்பொருள் சிவமே ஆவான் என்பதை "நமச்சிவாய வாழ்க" என்ற சொற்றொடரால் நூலின் துவக்கத்திலேயே சொல்லியருளுகின்றார் நம் அடிகள். மற்றும், மகாசங்காரக்கடவுளே முதற் பொருளாவான் என்பதையும் பல இடங்களில் நம் அடிகளார் கூறியருளுகின்றார். இவற்றுள், ஐயமுற்று வினவினார்க்கு அது தீர உரைக்கும் நிலையில் பிரமன் முதலானவர்கள் முதற்கடவுள் அல்லர் என்பதை,

"கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ
கங்காள மாமாகேள் காலாந்தரத்து இருவர்
தங்காலம் செய்யத் தரித்தனன் காண்"

எனக் கூறிக் காட்டுவதால் அறியலாம். உயிர்கள் ஆணவமலத்தால் மறைப்புண்டுகிடத்தலே, உலகம் ஒடுங்கி மீளத் தோன்றுவதற்கான ஏதுவாயிற்று என்பதை, "வல்வினையேன் தன்னை மறைந்திட மூடிய மாய இருளை...குடிலை மலங்கப் புலனைந்தும்" என்ற வரிகளால் சிவபுராணத்தே செப்புதல்கொண்டு தெரியலாம். "புகழுமாறு ஒன்றறியேன்...எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்" என அடிகளுரைத்துக்காட்டும் பகுதி நாத்திகநிலை நிலையுள்ளதன்று என்பதை நன்குவிளக்கும் தகையதாம்.

இதுகாறும் கூறிய அதனல், திருவாதவூரர், "புல்லாகிப் பூடாய்" என்ற பகுதியால் "அவன் அவள் அது" எனும் பிறப்புவகைகள் பையப்பையச் சிவபோத வாழ்வுக்கு அடிப்படையாக நிற்றலையும், "படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி" என்னும் வரியால் சிருட்டியாதி முத்தொழிலும் சிவபோத வாழ்வுக்கென அடிப்படையாக நடத்தப்படுவதையும், "படைப்போற் படைக்கும் பழையோன், படைத்தவை காப்போற் காக்கும் கடவுள், காப்பவை கரப்போன் கரப்பவை கருதாக் கருத்துடைக்கடவுள்" என்னும் வரிகளால் முதற்கடவுள் உண்மை நிலையுறுதலையும் தன் அநுபவ வாயிலாகவே கூறிக் காட்டுகின்றார். சுருங்கவுரைப்பின், திருவாதவூரர் வாழ்விலே, சிவஞானபோத முதற்சூத்திரக் கருத்துக்கள் கருக்கொண்டு நடைபெற்றிருத்தலை அடிகளே கூறும்

வாசகங்கள் நமக்கு அறிவித்து நிற்கின்றன என்னத் தடையில்லை. பக்கம் பல்காமைப் பொருட்டாகவே பற்பல மேற்கோள்களை எடுத்துரைக்காமல் ஒரு சிலவே காட்டப்படுகின்றன. கண்ணுறும் அறிஞர்கட்கு இக்கருத்துக்களைக்காட்டும் பற்பல வாசகங்கள் உள்ளத்திற்படாமற் போகமாட்டா.

**பாச உண்மை அறிதல்:**

சிவபோதவாழ்க்கைநெறியே செல்ல நயப்போர் மேற்கூறப்பட்ட முறையில் கடவுள் ஒருவருண்டு; அவர் சிவபெருமானே ஆவர் எனத் துணிவடைந்த பிறகு அப்பெருமானை எய்தி இன்புறுதற்குத் தம்மிடமுள்ள தடையாகிய பாசத்தின் உண்மையை அறிதல்வேண்டும். பாச உண்மை அறிதலைச் சிவஞானபோத சாத்திரம் நான்குபகுதியாகத் தெரிவிக்கிறது. அவற்றுள் முதலதாகத் தெரியவேண்டுவது அரன் உயிர்களில் இரண்டற நிற்கும் முறையாம். இரண்டாவதாக உயிர்களுக்குக் கன்மபலன்களை அரனே கொடுத்து உண்பிக்கிறான் என்பது தெரியவேண்டும். மூன்றாவதாக, உயிர்கள் உடல் மாறிப் பிறப்பிக்கப்படுவன என்பது தெரியவேண்டும். நான்காவதாக, இறைவன் சிற்சத்தியோடு சமவேதமாய் நீக்கமின்றிச் சருவ வியாபகனாக இருக்கிறான் என்பது தெரியவேண்டும்.

இவற்றுள் அரன் உயிர்களிடத்து ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இருந்து அவ்வுயிர்களை நிலைப்பித்து, அறிவித்துச் செலுத்துகின்றான் என்பது முதற்கண் நம்மால் அறியப்படத்தக்கது. கலப்புத் தன்மையில் உடல் உயிர்போல் உயிர்களே ஆய்

ஒன்றாய் நிற்கிறான் இறைவன். பொருள்தன்மையில் கண்ணின் ஞாயிறுபோல வேறாய் நிற்கின்றான் இறைவன். உயிர்க்கு உயிராய்நிற்கும் முறைமையில் கண்ணொளியின் ஆன்மபோதம்போன்று உடனாய் நின்று ஆன்மாக்கள் வினைக்கேற்பப் பிறப்பையும் இறப்பையும் அடைந்து நல்வழிப்படும்பொருட்டுச் சிற்சத்தியினின்று பிரியாது நிற்பன் முதல்வன். இவ் விடயத்தில் மாயாவாதிகள் முதலியோர் வேறுவேறு கருத்துக்கூறுவர். அவையாவும் குறைபாடும் மயக்க உணர்வும் பயப்பன. உண்மையும் அதன் தெளிவுமே சிவபோதவாழ்வுக்குச் செலுத்துந்திறத்தன. ஆத லால், நம் அடிகள் "பல் உயிரெல்லாம் பயின்றனன் ஆகி" எனவும், "உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே" எனவும், "என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா" எனவும், "விளங்கு ஒளியாய்" எனவும், "மிளிர்கின்ற மெய்ச்சுடரே" எனவும், "அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்அறிவே" எனவும், "அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி" எனவும், "மூலமாகிய மும்மலம் அறுக்கும் தூயமேனிச் சுடர் விடு சோதி" எனவும், "மறைத்திறம்நோக்கி வருந் தினர்க் கொளித்தும்" "இத்தந்திரத்திற் காண்டும் என்றிருந்தோர்க்கு அத்தந்திரத்தின் அவ்வயின் ஒளித்தும்" எனவும், "மிண்டிய மாயாவாதமென்னும் சண்டமாருதம்" எனவும், "தாயே ஆகி வளர்த்தனை" எனவும் பலபலவிதமாகப் பாடிப்பாடி அரன் உயிர்க ளிடத்தே இரண்டறநிற்கும் நிலையினைத் தாமநுப வித்துச் சொல்லிக்காட்டியிருக்கின்றாராவர்.

"அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப் புறந்தோல் போர்த்து எங்கும் புழுவழுக்குமூடி மலஞ்

சோரும் ஒன்பதுவாயிற்குடிலை மலங்கப் புலனைந்தும் வஞ்சனை செய்ய" என்ற பகுதியால் ஆன்மாக்கட்குக் கன்மமலனை அரனே கொடுப்பன் என்பது அடிகளால் அறிவிக்கப்பட்டிருத்தல் தெரிவிக்கும். "மாயப் பிறப்பு" எனவும், "பல்பிறப்பு" எனவும் அடிகள் கூறியுள்ள இடம் உயிர்கள் அச்சுமாறிப் பிறத்தலை அறிவிப்பது ஆகும். "ஆறுகோடி மாயாசத்திகள் வேறு வேறு தம் மாயைகள் தொடங்கின" எனவும், "மானேர் நோக்கி மணாளா போற்றி" எனவும் அடிகள் கூறிச்செல்வது முழுவதும் இறந்தமுதன்மையாகிய சர்வவியாபகத்தன்மையாளன் இறைவன் என்பதை நமக்கு அறிவுறுத்தும் இயல்பினவாம். இங்ஙனமாக, ஆன்மாக்கள் தம்பால் இறைநிலையினை எய்தவொட்டாதபடித் தடுக்கவல்ல பாசம் இருத்தலை அறிய வேண்டும் என்பதே அடிகள் நமக்குத் தமதனுபவம் போன்றுரைத்துக்காட்டியுள்ளார் ஆவர். இவற்றால் பாச உண்மை தெரிந்திடுதல் சிவபோதநெறிச் செல்வார்க்கு இரண்டாவதான கடமை என நாமுணர்தல் வேண்டும் என்க.

### ஆன்ம உண்மை அறிதல் :

இப்பால், சிவபோதவழியில் செல்வோர், பதியின் உண்மையும், பாசத்தின் உண்மையும் பிரமாணமூலம் தெரிந்துகொண்ட பின்னர், இவற்றையெல்லாம் அறிகிற தன்னைப்பற்றியும் ஆயத்தொடங்கித் தான் ஒரு பொருள் உண்டு என்பதை உணரவேண்டும். உலகம், தோன்றி நின்று ஒடுங்குவது எதற்காக? யார்பொருட்டாக? எனக் கேட்டுப்பார்த்தால் உயிரின் பொருட்டு என்ற விடை கிடைக்கும். உலகுண்மை

கொண்டு பதி உண்மை கண்டமைபோலவே, உடம்பு இருத்தலைக்கொண்டு உயிர் என்னும் பொருள் ஒன்று உள்ளதெனத் தெரிதல் தக்கதாம். இந்த ஆராய்ச்சியில் தலையிட்டவர்கள் ஆன்மா இன்னதென்ற உண்மையை உள்ளவாறு அறியமாட்டாமல், சூனியம் என்றும், உடம்பே என்றும், ஐம்பொறிகளே என்றும், சூக்கும உடம்பு என்றும், பிராணவாயுவே ஆன்மா என்றும், பிரமமே ஆன்மா என்றும், எல்லாங்கூடியதே ஆன்மா என்றும் பலவேறு கொள்கையராகித் தடுமாற்றம் எய்தினோரும் உளர். ஆதலால், இவற்றையெல்லாம் ஆராயும் அதுவே ஆன்மா என்ற முடிபுக்கு வரவேண்டியுள்ளது. இந்த ஆராய்ச்சியை நம் சுவாமிகள் "நானார்" என்ற வினவால் தெரிவித்துள்ளார்கள். "மண்ணல்லை விண்ணல்லை" என்பதுபோன்ற தேவாரப்பாக்களும் இவ்வாராய்ச்சி நெறிகாட்டுவனவாகும். இவற்றால் ஆன்மா என்பது மாயையும் அன்று; கடவுளும் அன்று என்ற முடிவு தோன்றப்பெறும். இதுபற்றியே "சிந்தனை நின்தனக்காக்கி" என்னும் திருச்சதகத்துப் பாடலில் "இரண்டும் இலித் தனியனேற்கே" என்று கூறிக் காட்டியுள்ளார் நம் சுவாமிகள். "குடம்பை தனித்து ஒழிய" என்னும் குறட்பாவும் உடம்பு உயிரன்றென்பதை உவமையாற்காட்டி நிற்றல் தெரியலாம். "ஒருவனே போற்றி" என்னும் திருச்சதகச்செய்யுள் உயிர் ஒரு தனிப்பொருள் என்பதைத் "தருக நின் பாதம் போற்றி தமியனேன் தனிமைதீர்த்தே" என்கின்றது.

இனி, "எறும்பிடை நாங்கூழ் என்னப் புலனால் அரிப்புண்டு அலந்த வெறுந்தமியேன்"; "மெய்ப்பால் நரம்பு கயிறாக மூளை என்பு தோல்போர்த்த குப்பாயம்

புக்கு இருக்ககில்லேன்"; "புளியம்பழம் ஒத்திருந்தேன்"; "இருள்புரி யாக்கையிலே கிடந்து எய்த்தனன்"; "புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம் தத்தம் மதங்களிற் றட்டுளுப்புப் பட்டு நிற்க"; "துணையான சுற்றங்களத்தனையும் துறந்து ஒழிந்தேன்"; "பேராசையாம் இந்தப் பிண்டம் அற"; "மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி" என்றெல்லாம் நம் ஆளுடை அடிகளார் ஆங்காங்கு கூறிக் காட்டி உயிரென்ற ஒன்றுண்டெனவும், அது உடம்பு, புலன், மனம் முதலவற்றின் வேறெனவும், இருளோடு பிடிப்புண்டு கிடப்பதெனவும், அஃதொரு சித்துப் பொருள் எனவும் நமக்குத் தாமறிந்து தெரிவிக்குமாற்றால் விளக்கியருளுதல் காணலாம். எனவே, பிரபஞ்சம் ஆன்மா அன்று என்பதும், உடம்பு முதலன ஆன்மா அல்ல என்பதும் தெரிவதே பசு உண்மை அறிதலாகும். ஆதலால், சிவபோதநெறிக்குரிய இம்மூன்றும் அளவையும் சுவாமிகளால் ஓர்ந்து தரப்பட்டுள்ளது எனல் தகும். இவ்வையங்களெல்லாம் நீங்கினாலன்றித் தெளிவு பிறவாது என்பதை "ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு" என்னும் குறட்பாவும் கூறும். இனி இவற்றை அடுத்துப் பசு, பாசம், பதி இவற்றின் இலக்கண அறிவும் சிவபோதச் செந்நெறிக்குத் தேவையாகும் என்பர். ஆதலின் இவ்விலக்கணநெறிபற்றி நம் சுவாமிகள் அருளிச்செயல்களை ஒருசிறிது காண்போம்.

**பசு இலக்கணம் அறிதல்:**

பசு எனினும் ஆன்மா எனினும் ஒன்றேயாகும். பாசப்பிணிப்பு ஆன்மா அடைந்திருத்தலின் பசு

எனப்பட்டது. வியாபகப் பொருளாதலால் ஆன்மா என்பர். ஆன்மா, அந்தக்கரணங்களோடு ஒற்றுமைப்பட்டு, அரசன், அமைச்சராதியரோடுகூடி அரசியல் நடாத்துவதுபோல ஐந்தவத்தைப் படுகின்றது. இதனை உயிரின் பொது இலக்கணம் என்பர். மல நீக்கம் பெற்று இறைவனை அடைதலே இதன் சொரூபம். இதற்கும் இறைவனருளே தேவையாம். மலமறைப்பு உடைமையினாலேதான் உயிருக்குத் தன்னியல்பைத் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. இவ்விஷயத்தில் மாயாதத்துவங்கள் உபநேத்திரம்போன்ற அளவுக்கே துணைபுரிவனவாம். திருவருளே உண்மைக்கண்ணாகும். சாக்கிரம் முதலன ஐந்தவத்தை எனப்படும். இவை கேவலம், சகலம், சுத்தம் என முத்திறத்தினும் நடைபெறும். இவைகளையெல்லாம் அறிதல்நெறியினைச் சிவஞானபோதத்து நான்காம் சூத்திரம் சொல்லுகின்றது. அந்தக்கரணங்களோடு ஆன்மா ஒன்றுபட்டு நடப்பினும் அது அந்தக்கரணத்தின் வேறெனத்தெரிதலே மிகவும்முக்கியமாம்.

"இருந்தென்னை ஆண்டாய் இணையடியே சிந்தித்திருந்து இரந்துகொள் நெஞ்சே"; "இருளகற்றி எஞ்ஞான்றும் துன்பந் தொடர்வறுத்து ... கொண்டான்"; "என்னுடை இருளை ஏறத் துரந்தும்"; "உள்ளத்து அன்பு மீதூரக் குடியாக்கொண்ட கொள்கை" "காரணமான மனுதி குணங்கள் கருத்துறும் ஆகாதே"; "பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடும் ஆகாதே"; "அங்கிது நன்றிது நன்றெனு மாயை அடங்கிடும் ஆகாதே"; "வைப்புமாடென்று மாணிக்கத்தொளி என்று மனத்திடை உருகாதே"; "யானே பொய் என் நெஞ்சும் பொய்"; "சிந்தை

செய்கை கேள்வி வாக்குச் சீரிலம் புலன்களால் - முந்தையான காலநின்னை எய்திடாத மூர்க்கனேன்”; “நினைப்பதாக சிந்தைசெல்லும் எல்லையைய வாக்கினால் தினைத்தனையுமாவதில்லை; அனைத்துலகுமாய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா” என இங்ஙனமெல்லாம் தமது அநுபவநெறியாகவைத்துப் பசுவினது சார்ந்ததன் வண்ணமாம் தன்மையும், அதன் அவத்தைகளும், அதன் உற்றதுணையும் நமது அடிகளால் சிவபோதநெறிச் செலவில் வேட்கையுடையார்க்குச் செப்பிக் காட்டப்பட்டுள்ளன. அடைந்த பொருளளவுக்கு வியாபிக்கின்றதான ஆன்மாவினை இறைவனை அடையப் பழக்குதலே சீரிதாம் என நாம் இங்குத் தெரிதல் நன்றும்.

## ஐவகைப்பாச இயல்புகள் அறிதல் :

ஆன்மா, மெல்ல மெல்ல ஈடேற்றப்பாதையில் முன்னேறுதற்பொருட்டு, மேற் கூறப்பட்டவற்றை அடுத்துத் தெரிந்துகொள்ள வேண்டுவது பாச லக்ஷணம் பற்றியதாகும். இந்திரியங்கள், உயிரால் விஷயங்களை அறிகின்றன. அவ்வாறே, உயிரானது, முதல்வனால் விஷயங்களை அறிகிறதெனக் கொள்ளல் வேண்டும். இங்ஙனம் அறியும் முறையில், கன்மத்திற்கு ஏற்றபடியே உயிருக்கு அறிவிப்பது திரோதான சத்தி எனப்படும். கன்மத்துக்குத் தக்கவாறு விபரீத உணர்வைப் பயப்பது ஆணவமலத்தின் இயல்பாம். விருப்பு வெறுப்புகளைச் செய்வது கன்மமலத்தின் இயல்பாகும். மயக்கத்தைச் செய்தலே மாயையின் இலக்கணமாம். அங்ஙனம் மாயை செய்தற்கு ஏற்றபடி கருவியாயிருப்பது மாயாகாரியத்தின் இயற்கை

ஆகும். எனவே உயிரானது, இறைவன் அறிவிக்க அறியும் முறையில் மேற்கூறப்பட்ட ஐவகைப் பாசங் கட்கு ஏற்ப அறியலுறுகின்றது என்பது பாச இயல் பறிதல் எனப்படும். சுருங்க இவற்றை உரைப்பின் தத்துவங்கள் யாவும் உயிரால் தொழிற்படும் எனவும், உயிர்கள் யாவும் அரனாலே அறியும் எனவும் தெரிந்து கொள்ளலாம்.

இந்த நெறியிலே நம் சுவாமிகள், பாசம் அன் பைத் தடை செய்தலையும், ஆனால் இறைவன் உயிர் களை அறிவுறுத்து நடத்துவதையும், "இடையறு அன்பு உனக்கு என் ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்" எனவும், "உன் திருவடிக்கே அகம் குழையேன் ... கூத்தாடேன்" எனவும், "வானாகி மண்ணாகி ... யான் எனதென்று அவரவரைக் கூத் தாட்டுவானாகி நின்றாயை" எனவும், "பதைத்து உருகும் பாழ் நெஞ்சே! நீ மாளா வாழ்கின்றாய்" எனவும், "நெஞ்சமே வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய்; சூழ்கின்றாய் கேடு; அவலக் கடலாய வெள்ளத்தே வீழ்கின்றாய்" எனவும், "நான் வினைக்கேடன் என் பாய்போல இனையனான் என்று உன்னை அறிவித்து என்னை ஆட்கொண்டு எம்பிரான் ஆனாய்" எனவும், "தாயான தத்துவனை" எனவும், "மாயவாழ்க்கையை மெய்யென்று எண்ணி மதித்திடாவகை நல்கினான்" எனவும், "சித்தமே புகுந்து எமை ஆட்கொண்டு தீவினை கெடுத்து உய்யலாம் பத்திதந்து.......... மூவுலகுக்கும் அப்புறத்து எமை வைத்திடும் அத்தன்" எனவும், பற்பல வாக்குக்களால் வெளி யிட்டுக்கூறி நம்மனோரைத் தெருட்டுதல் காணலாம். யாவற்றையும் தம் அநுபவமாகவே கூறியிருத்தலும்

நாம் கருதிப்பார்த்தல் நன்றும். இனி, அடுத்தபடி யாகத் தெரிவிப்பதுபற்றி ஆராய்வோம்.

**பதியின்சொரூபம் அறிதல்:**

பதி ஒருவன் உண்டெனை அறிந்தபின்னர், அவன் ஒன்ருய் வேருய் உடனுய் இருந்து நம்மைச் செலுத்தி யுதவும்முறை தெரியப்பட்டது. அதாவது, இறை வனது தடத்தநிலை உயிர்கட்கு எப்படி உதவுகின்ற தென்பதைத் தெரிதலாகும். இனி, அவன்பால் மேன் மேலும் அன்புமீதூரும்பொருட்டும், அவனது அரு ளியல்பை நன்கு அறிதரும்பொருட்டும், அம்முதல்வ னுடைய சிறப்பியல்பினை நாம் அறிதல்வேண்டும். சிவபோதநெறிப்படர்பவர்க்கு உரிய பொது ஒழுக்கங் களில் இது இறுதியாகத் தெரியவேண்டுவதாகும். இதனை அறியும்போது, அவனை அவனருளால்தான் அறியலாம் என்ற முடிவு தோன்றப்பெறும். அப் போதுதான், உயிருக்கு அருள்தாகமேலீடு விளையும். இவ்வாறன்றி, இறைவனை அளவைகளால் அறிந்து விடலாம் என்று உரைப்பதும், அடியோடு வரை யறுத்துச் சொல்லமுடியாத அநிர்வசனப்பொருள் ஆவன் என்று உரைப்பதும் பொருந்தாததாகும்.

இறைவன் சித்துச்சத்துப் பொருளாவான் என் பதை உயிர்கள் அவனருளால் அறியக்கூடும். இதனை நம் சுவாமிகள், "அவன் அருளாலே அவன் தாள் வணங்கி" என்று கூறிக்காட்டும் பண்பினுல் நாமறி தல் கூடும். மற்றும், முதல்வன் "நூலுணர்வு உணரா நுண்ணியன்" ஆவன். "மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன்" என்றும் உரைப்பர். "நின் அருட் கண்ணுல் நோக்காதார் அல்லாதாரே" என்பர்

ஆளுடை அரசர். "அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்" எனவும், "அளவறுப் பதற்கரியவன் ........ அடியவர்க்கு எளியான்" எனவும், "பரங்கருணையொடும் எதிர்ந்து தோற்றி மெய்யடியார்க்கு அருட்டுறை அளிக்கும் சோதியை" எனவும், "ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லான்" எனவும், "ஒன்று நீயல்லை அன்றி ஒன்றில்லை யாருன்னை அறிய கிற்பாரே" எனவும், "சோதியாய்த்தோன்றும் உருவமே அருவாம் ஒருவனே சொல்லுதற்கரிய ஆதியே நடுவே அந்தமே பந்தம் அறுக்கும் ஆனந்தமா கடலே தீதிலா நன்மைத் திருவருட்குன்றே" எனவும், "கேட்டறியோம் உனைக் கண்டறிவாரை" எனவும், "அப்பாலைக்கப்பாலான்" எனவும், "அறிவாம் தேற்றன்"; "உண்மையுமாய்ப் பூத்தோன்"; "ஆனந்தக் கூத்தன்"; "இன்பப்பெருமான்"; "குணங்களும் குறிகளுமில்லாக் குணக்கடல்"; "முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருள்" எனவும் பலபடியாலும் இறைவன் சொரூப இயல்புகளை நம் அடிகள் கூறியிருத்தல் காணலாம்.

சிவஞானபோதம் என்னும் சாத்திர நூல் பொதுப் பகுதியாகவும் சிறப்புப் பகுதியாகவும் இருதிறத்ததாய் உள்ளது. பொதுப்பகுதியானது சிவபோதநெறிச் செல்வோர்க்கு இன்றியமையாதிருக்க வேண்டிய இயல்புகளை வகுத்தோதுகின்றது. பதி ஒருவன் உண்டு; அவன் ஒன்றாய் வேறாய் உடனாய் இருப்பவன்; சித்துச்சத்தானவன்; சருவவியாபகன்; பாசம் என்பது உயிரின் தடை; ஆன்மா, சார்ந்ததன் வண்ணம் வியாபிப்பது; மலமறைப்பால் அறிவு விளங்கப்பெறாமல் அவத்தையுறுவது; ஆனால்

அரன் அருளைத்தேடி அடையப்பெறின் எல்லாம் அறியவல்ல இறைவனில் வியாப்பியமாகும் இயல் புடையது என்கிற இச்செய்திகளெல்லாம் பொது வாகச் சிவநெறிபடர்வோர் தெரிதல் வேண்டுமென்று சாத்திரம் சாற்றுதல்போன்றே நம் சுவாமிகளும் அநுபவரீதியான வாசகங்களாலே பலப்பல வித மாகச் சொல்லிக்காட்டிச் செல்லுதலை இதுகாறும் கண்டோம். இனிச் சாத்திரநூல் கூறும் சிறப்பு முறையில் சிவபோதவாழ்வினை எங்ஙனம் மேற் கொள்ளல் வேண்டுமென்பதையும், அங்ஙனம் சுவாமி கள் பழகி உணர்த்தும் பரமவாசகவுரைகளையும் தெரியப்பெறுவோமாக.

இனி, உண்மை அதிகாரமுறையிலே உயிர்புரியும் சாதனைகளையும் பயன்களையும்பற்றிய செய்திகளைப் பார்ப்போம். இதுகாறும் கூறப்பட்டவைகொண்டு சரியையில் ஞானமாதிய மூவகை ஞான இயல்கள் ஒருவாறு விளக்கப்பட்டிருத்தல் காணலாம்.

## 2. சிவபோதவாழ்வின் சிறப்பியல்

### ஆன்மசொரூப நிலையறிவு பெறுகை:

ஆன்மாக்கள் பொதுப்படையில் பதி பசு பாசம் ஆகியவற்றின் உண்மையைத் தெரிதலே, பலகலை ஆகம வேதம் யாவற்றையும் படித்தறிதலின் கருத் தாகும். இனி, அவ்வழி ஒழுகுதலே சிறப்புடைக் கடமையாகும். கற்றதனால் ஆய பயன் வாலறிவன் நற்றாள் தொழுதலாகிய கடமையில் நிற்றலேயாம். இதனையே நம்சுவாமிகள் அருளிச்செய்துள்ள,

"உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம்போல்
பற்றல் ஆவதோர் நிலையிலாப் பரம்பொருள்
அப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயன்அது நுகர்ந்திடும்
பித்தர்சொல் தெளியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயம் கண்டாமே"

என்னும் பாடலாலும் அறியலாகும்.

ஆன்மா பளிங்குபோல்வது. அதாவது சார்ந்த தன் வண்ணமாகத் திகழ்வது. "யாதொன்று பற்றின் அதன் இயல்பாய் நின்று பந்தம் அறும்பளிங்கனைய சித்து" என்பர் பெரியோரும். தாய் ஒருத்தி, தன் தவழும் குழந்தையை வளர்த்துப் பெரியவனுக்குவதுபோலவே, முதல்வனும் தனது அருளால் ஆன்மாவினை அவ்வப்போது வேண்டும் சூழ்நிலைகளுக்குள் விட்டுச் சிவபோத வாழ்வுக்குச் செலுத்துபவன் ஆவான். ஆன்மா, இங்ஙனம், சார்ந்ததன் வண்ணம் ஆகும் இயல்புடைமையால், அசத்தினைச் சார்ந்தபோது அசத்தாயும், சத்தினைச் சார்ந்தபோது சத்தாயும் இலகுவதுபற்றிச் சதசத்து என்று உரைக்கப்படும். இந்த உண்மையை நாமனைவரும் உறுதியாகக் கொள்ளல்வேண்டும். ஆன்மா, தன்னை வேருகத் தனித்தறியாது; அது சத்து அசத்துக்களை அறியும்வழியால் தன்னையும் அறியும். சத்தை அறிவதே சாலச் சிறப்புடைக் கடமையாம். பாசம் இறைவனை அறியாது. இறைவன் எதொன்றையும் அறியவும் அடையவும் வேண்டாத நிறைவுடையன். ஆகையால், ஆன்மாத்தான், நன்னெறி அறிந்த

பின்னர் முதல்வன்வழித் தலைப்பட்டு ஒழுகும் அதிகாரம் உடையது. ஆன்மாவை அவ்வித நிலைக்கு இறைவன் உண்ணின்று செலுத்தி வந்திருப்பதை அறிய அறியத்தான், தான் நன்னிலை எய்தற்குரிய அதிகாரி என்பதை நன்கு உணரும். இந்தச்செய்திகளையே ஏழாம் சூத்திரம் மூன்று பிரிவுகளின்கீழ் எடுத்துரைக்கின்றது. ஆன்மா, தனக்குள்ளதான இந்தச் சந்தர்ப்பத்தைக் கைந்நழுவ விடலாகாது.

சூழ்நிலைகளே ஒருவனை உயர்த்தவும், தாழ்த்தவும் செய்யும். நாமடைந்துள்ள இம்மனித்தப்பிறவி, தக்கதொரு சூழ்நிலையே ஆகும். இதிலே நமக்குச் சாதி, ஆயுசு, போகம் முதலான வசதிகள் அளிக்கப் பட்டுள. இவற்றைத் தக்கநெறியிலே வசமாக்கிக் கொண்டால் முன்னேறலாம். அகப்பொருள்வழியிலேயும், ஒரு தலைவன், குறித்ததொரு தலைவியை அடைவது, அவனுக்கு வசதியாக வாய்த்துள்ள வயது, பொழுது, சோலையிடம், தோழன், தோழி, இயற்கை நிகழ்வு, செவிலி முதலியவற்றையே சார்ந்துள்ளது. இவைகளைத் திறம்படப் பயன்படுத்திக் கொள்வோன், தான் விழைந்த தலைவியை அடையப் பெற்று இன்புறுகிறான். இவற்றைப் பயன்படுத்த அறியாதான் பழி, பாவம், அச்சம், பகை முதலியவற்றுக்கு உள்ளாகித் துன்புறுகிறான். பேரின்ப நெறியிலும் இந்த முறையினைத்தான் ஆன்மாக் கைக் கொள்ள வேண்டியுள்ளது. இதற்கு இறையருள் துணைபுரிகின்றது. முடித்து உரைப்பின், ஆன்மாவானது, தனக்குக் கிடைத்துள்ள மனித்தப்பிறப்பு முதலிய பேறுகளெல்லாம் தான் சிவபோதச் செந்நெறியிற் செல்லும்பொருட்டே வாய்த்துள்ளன

எனக்கொண்டு, இறையின் துணையை எதிர்நோக்கி முயலவேண்டும் என்று தெளியலாம்.

இக்கருத்துக்களை நம் சுவாமிகள், "போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின் - நாற்றத்தின் நேரியாய்...பிறந்த பிறப்பறுக்கும் எங்கள்பெருமான்" என்றும், "வேகம் கெடுத்தாண்ட வேந்தன்" என்றும், "சகம் பேய் என்று...கற்றுமனமெனக் கதறியும் பதறியும் மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது" என்றும், "அறிவே போற்றி; கதியேபோற்றி; சைவா போற்றி; தோழா போற்றி; வாழ்வே போற்றி; என் வைப்பே போற்றி; மூவேழ்சுற்றம் முரணுறு நரகிடை ஆழாமே அருள் அரசே போற்றி; கோகழி மேவிய கோவே போற்றி; மற்றோர் பற்றிங்கு அறியேன் போற்றி" என்றும், "யாதும் ஒன்று அல்லாப் பொல்லா நாயான நீசனேனை ஆண்டாய்" என்றும், "வைத்தநிதி பெண்டிர்...கலக்கம் தெளிவித்த வித்தகத் தேவர்" என்றும், "பற்றற நான் பற்றிநின்ற மெய்த்தேவர்" என்றும், "முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப் பத்திநெறி அறிவித்து... ஆண்ட அத்தன்" என்றும், "உரியேனல்லேன் உனக்கடிமை உன்னைப் பிரிந்திங் கொருபொழுதும் தரியேன் இன்னதென் றறியேன்" என்றும், "வம்பனாய்த் திரிவேனை வா என்று வல்வினைப்பகை மாய்த்திடும் உம்பரான்" என்றும் இன்னோரன்ன பல்வகையாற் பாடிப்பாடிப் பசு இயல்பையும், அதன் கடமையையும், பதியே கதியென்பதையும் தம் அநுபவ முறையாகக் கூறியருளுதல் காணலாகும்.

தமது அமைச்சுப்பதவி முதலியவற்றையும், தமது அரசனுவான் பாண்டியன் என்பதையும், மற்று

முள்ள சுற்ற முதலாம் பற்றினையும் விட்டொழித்து இறைவன்தாளே குறுகவேண்டும் என்ற திடமான உறுதிகொண்டனர் நம்சுவாமிகள் என்பதை அவரது வாசகங்கள் நமக்கு உணர்த்தித் தெருட்டுகின்றன வாகும். இத்தகைய கோட்பாடு கொண்டிருந்தமையி னாலேயே முதல்வன் அவரைத் தம்மடிப்படுத்திக் கொள்வதற்கறிகுறியாகவும், முன்னறிவிப்பாகவும், திருவாதவூரிலே அடிகளார்க்குத் திருச்சிலம்பொலி கேட்பித்தருளினன் என்க. “மின்னுக்கெல்லாம் பின் னுக்கு மழை” என்பதுபோலவே, அருள்நாதச் சிலம் பொலியானது முன்னர் வெளிப்பட்டுப் பின்னர், சிவா னந்தப் பேரொளியைத் தடையின்றிக் கூட்டிவைக் கின்றதென்னலாம். திருவாதவூரில் பாதச்சிலம்பொலி காட்டியபண்பு, படிப்படியாக நம் அடிகளைத் தில்லைப் பொதுவாம் பேரொளியுட் புகுவித்து உதவியதாகும். இதுபற்றியே கீர்த்தித் திருவகவலின் இறுதியிலும் ‘ஒலிதரு கைலை’ எனக் கூறிக் காட்டியுள்ளனர் நம் சுவாமிகள் என்க. ஒலி காட்டி, அடியாரிற் கூட்டித் திருவடிசூட்டித் தெருளூட்டி இன்புள் நாட்டிப் பரமன் உதவிய பண்பே நம் சுவாமிகளாருடைய சிவபோத வாழ்வின் சிறப்பியல் ஆகும் என்க. இதனால், நம் சுவாமிகட்குத் திருவாதவூர் நிகழ்ச்சியின்போதே ஆன்ம சொரூபநிலை யறிவு பெறுகை நிகழ்ந்திட்டுப் பின்னர் மெல்ல மெல்ல ஏனைய பேறுகளும் வாய்ப் புற்றன என்னலாம். இம்முதல் நிகழ்வு நம் சுவாமி கட்குப் பதினாறுக்குமேல் இருபத்துநான்கு வயதெல் லைக்குள்ளே நேரிட்டிருக்கலாமென நாம் கொள்வதில் ஏதும் குற்றமில்லையன்றே! இனி, நாம், அடிகளார் சிவஞானசாதனநெறியிலே செல்லலுற்றமாண்பினை இயன்றளவு காண்போமாக!

இந்நெறிச்செலவு நற்றவத்தால் வாய்ப்புறுகின்ற சிவநேயச் செல்வர்களான சுத்த தேகிகளெனச் சிறப்பிக்கப்படும் சிவனடியார் கூட்டுறவால் கிடைக்கப் பெறுவதாகும். இந்தநிலை நம் சுவாமிகட்கு உத்தர கோசமங்கைத் தலத்தே பெரிதும் வாய்ப்புண்டது என்பர்.

## ஞாஞசாரியர்த் தேட்டம் (ஞானத்துச்சரியை) :

ஜீவர்களில் பக்குவப்பட்டு வருபவர்கள் நற்றவம் என்று கூறப்படுகின்ற சரியை, கிரியை, யோகம் எனப்படும் மூன்று நெறியும் கடந்தவராவார்கள். இவர்கள் ஞானமொன்றையே நாடி நிற்பர். இந்த ஞானம் குருவருளால் தரப்பட்டு வந்தடைவதாகும். இது பதிஞானம் எனப்படும். "ஐம்புல வேடரின்" என்னும் சூத்திரம் குருவெளிப்பாடுபற்றி விளக்கிக் கூறுவதாகும். ஒரு ஜீவனுக்கு இத்தகைய குரு வெளிப்பாட்டுக்கு முந்தியநிலையெல்லாம் ஒருவகையில் அடங்கும். அது இகத்துக்கு உரியதெனப்படும். குரு வெளிப்பாட்டுக்குப் பிந்தியதெல்லாம் ஒருவகை யாகும். அதுவே பரத்துக்கான பரமநிலை எனப்படும். இங்ஙனம் குருவெளிப்பாட்டால் பரமநிலைக்காளாகிப் பேரின்புற்றோர் பலர். இவர்களுள்ளும் ஸ்ரீ மாணிக்க வாசகசுவாமிகள் வாழ்க்கையே இக்குருவெளிப்பாட்டு உண்மையினை விளக்கமாக நமக்குத் தெரிவிக்கிறது.

சுவாமிகள் சரியை, கிரியை, யோகங்களின் விரிவான பன்னிரு பகுதிகளையும் தவமுதிர்ச்சியால் விரைந்து நிறைவுறுத்திக்கொண்டாராவர். உலகியல்வாழ்வு சிறப்புடையது என அவரது உள்ளம்

சற்றும் கருதவில்லை. "வெந்துவிழும் உடற்பிறவி" என்ற தொடக்கமுடைப் பாடல்கள் இக்கருத்தைப் புலப்படுத்தும். "மாய வாழ்க்கையை மெய்யென்று எண்ணி மதித்திடா வகைநல்கினன்" என்று அடிகளார் கூறுதல் இம்மை வாழ்க்கையை அவர் மதிக்கவில்லை என்பதைக் காட்டும். ஓடும் பொன்னும் ஒப்ப நோக்கும் நிலையில் இவரது உள்ளம் பண்பட்டு விட்டது. உமி சிறிது நீங்கிய வித்துப்போன்று இவரது மலம் கட்டுவிடலுற்றது. திருவருள் ஒன்றையே நாடலுற்றது இவரது நெஞ்சம். "தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதும் நீ"; "குன்றே அனைய குற்றங்கள் குணமாமென்றே நீ கொண்டால் என்தான் கெட்டது"; "ஊனே புகுந்த உனை உணர்ந்தே உருகிப் பெருகும் உள்ளத்தைக் கோனே அருளும் காலந்தான்...என்றோ கூடுவதே" என்றெல்லாம் நம் சுவாமிகளார் கூறியுள்ள வாசகங்கள் அவர்களது ஞான பக்குவத்துக்கு ஏற்றதான நிலையினை நமக்கு உணர்த்தவல்லன ஆம். சுவாமிகள் வாழ்க்கையில் திருவாதவூரில் பாதச்சிலம்பொலி நிகழ்ச்சி, கப்பலுக்குச் சுக்கான்போன்று முக்கியமானதாகும். "சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழ" என்ற இடம் இதனை உணர்த்தும். இதனால், சுவாமிகட்குச் சிவபோத வாழ்வடைதற்கு ஆராத ஆசை எழுந்ததென் நாமுணரலாம்.

இப்பால், அச்சிவபோத வாழ்வினைத் தானே அடைந்துவிட இயலாது எனவும், குருவருளாலே தான் கொள்ளக்கூடும் எனவும் உணர்ந்தே, தாம் அலுவலாற்றிவரும் மதுரைச்சொக்கேசரின் திரு

முன்பே வேண்டிவந்தனர் ஆவர் நம் சுவாமிகள் என்னலாம். "ஆடகமதுரை அரசேபோற்றி கூடலில் இலங்கு குருமணி போற்றி" என்ற பகுதிகள் இச் செய்திக்குப் பலமளிக்க வல்லனவாம். பின்னர், நம் சுவாமிகளின் ஆதுரநிலையினை அறிந்த அரனார், உத்தரகோசமங்கைத்தலத்திலே அடியார் கூட்டத்துள் பொடியார் கோலத்தொடும் காட்சியருளிச் சுவாமிகட்குத் திருநீறருளித் தேற்றுதல் செய்தருளினராவர். இதனை, "உத்தரகோச மங்கையுள் இருந்து வித்தக வேடம் காட்டிய இயல்பும்" என்பதும், "முன்னீறும் ஆதியுமில்லான் முனிவர் குழாம் - பன்னூறு கோடி இமையோர்கள் தாம் நிற்பத் - தன்நீறு எனக் கருளித் தன்கருணை வெள்ளத்து - மன்னூற மன்னுமணி உத்தர கோசமங்கை" என்பதும் உணர்த்தும் திறத்தனவாகும். மேற்கூறப்பட்ட இம்முறைமையால் சரியையாதி மூன்றன்நிலைகளையும், திருவாதவூர் - மதுரை - உத்தரகோசமங்கை நிகழ்ச்சிகளின்மூலம் நம் சுவாமிகள் கடந்தருளியமை புலனாகும். இனிக் குருவெளிப்பாடு நிகழ்ந்த இடமே திருப்பெருந்துறை ஆயிற்று.

இந்த இடம், நம் சுவாமிகளின் வாழ்விலே ஞான மார்க்கத்து முதற்களம் ஆகும். இங்குத்தான் திருவருட் பதிவும் குருவெளிப்பாடும் ஒருங்கே நிகழலுற்றன. இதன் பிறகு இம்மையில் எப்படிப்பட்ட உயர்ந்த வாழ்வையும் அடிகளாரது நெஞ்சம் இம்மியும் கருதிற்றிலது. "மெய்தானரும்பி" என்னும் பாடலும், "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு" என்னும் பாடலும் இக்கருத்தினை வலியுறுத்தவல்லனவாம். திருச்சதகமும், நீத்தல் விண்ணப்பமும் ஆகிய

பதிகங்கள் நம் சுவாமிகள் தேகாதி பிரபஞ்சங்களை நீங்குதலும், நீங்கிய அந்நிலையே வைராக்கியமடைத லும் உணர்த்துவனவாகும் என்ப. ஞானாசாரியரால் ஆட்கொள்ளப்பட்டஇடம் திருப்பெருந்துறை ஆதலா லும், தம்மை ஞானமார்க்கத்துக்கு உரிய கேட்டல், சிந்தித்தல் என்னும் முறப்பட்ட நிலைகளிலே நிறுத்தி யுதவிய சூழ்நிலை வாய்ப்புக்கொண்ட தலமாதலாலும், நம் சுவாமிகளுக்கு இத்திருப்பெருந்துறைத் தலத் திடத்தே அலாதியான அன்புண்டு. இத்தலத்திலே சுவாமிகள் முதல்முறை ஆட்கொள்ளப்பட்டுச் சில நாளளவும் வதிந்தனர். இரண்டாமுறை பாண்டியன் உண்மையுணர்ந்து விடுவித்தபோது இத்தலத்துக்கு எழுந்தருளி நீண்டநாளளவு வதிந்துள்ளனர். இவ் விருமுறை வாழ்வுகளில் முன்னதிற் கேட்டலும் பின் னதில் சிந்தித்தலுமான ஞானநெறி கைகூடப் பெற் றனர் அடிகளார் என நாம் ஊகித்தல்கூடும். இங்குத் தான், சிவபெருமான், நாயனுரைமட்டும் பூமியில் இருத்திப் பிற அடியார்களைத் தடாகத்தில் எழுந்த சிவசோதியுள் மறையச்செய்து, நாயனுரைத் "தில்லை யுட் கோலமார்தரு பொதுவினில்" வந்து இத்தகைய இரண்டறக் கலக்கும் பேற்றினை அடையலாகும் எனத் தேற்றி நிறுத்திச்சென்ருர் என்னலாம். "நாயினேனை நலமலி தில்லையுள்...ஈங்கு ஒழித்தருளி" என்று அடிகளார் கூறுதல் இவ்வுண்மை தெரிவிப் பனவாகும். இந்த முறையிலேயே, திருக்கோவை யாரில் இயற்கைப் புணர்ச்சிக்குரிய காட்சி முதலான ஈரெட்டுத் துறைகளமையும் பாடல்களும் பேரின்பக் கிளவியில் சத்திநிபாதம் ஒத்திடுங்காலத்து உத்தம சற்குரு தரிசனம் ஆகும் என்று கூறிப்போதல்

காணலாம். இது, குருவின் திருமேனி காண்டல் முதலாகச் சிவமறிவிக்கத் திருவருளைக்கண்டது ஈருகக் கூறப்படும். "தில்லைக் குருவளர்"; "தில்லைக் கூத்தன் அருளெனலாகும்" என்ற சொற்றொடர்கள் கொண்ட திருக்கோவையார்ப் பாடல்களால் இச்செய் திகளை நாம் அறிதல்கூடும்.

குருவெளிப்பாடுமுதல் உள்ளதான, நம் சுவாமி களார், சிவபோதவாழ்வுநெறிக்குத் திருவாசக்நூலே யன்றித் திருக்கோவையார் நூலும் இணைந்து சான் ருகும். எனினும், பின் உள்ள நூலின் பாடல்களை எடுத்து விரித்தல் இக்கட்டுரையைப் பெரிதாக்கி விடுமென அஞ்சி ஏற்ற அளவுக்குச் சுருக்கமாகவே காட்டப்படுகின்றதெனக் கொள்க. நம் சுவாமிகள் திருப்பெருந்துறையினைப் பெரிதும் மதித்தனராத லால், இத்தலத்தினை ஒரு நூறு இடங்கட்குமேலும் திருவாசகத்தே குறிப்பிடுகின்ருராவர். எனவே, நம் சுவாமிகள் நெஞ்சம், "ஊசல் கயிறற்ருல் தாய் தரையே ஆம் துணை" கோடல் ஒப்ப அரன் (குரு) கழலையே பற்றிக்கிடக்கும் நிலையினை எய்திடலுற்ற தென நாமறிதல் நன்ரும். "பெருந்துறையான் ... ... வார்கழலே பாடுதும்"; "பெருந்துறையான் செய்ய திருவடி பாடிப்பாடி"; "பெருந்துறைமேய பிரானைக் கூவாய்" முதலாகப்பலபட்ட பாக்களால் அப்பெரு மானையே சிக்கெனப்பிடித்து நம் சுவாமிகள் சிவபோத வாழ்வினைச் செலுத்திய முறைமை நாம் தெரிதல் கூடும். இத்தகைய வாழ்வு சிவஞானபோதத்து எட்டாஞ்சூத்திரம் கூறிச்செல்லும் நெறியென்பதை நாம் அறியலாம். இதுவரை கூறியவற்ருல் கேட்டல்

ஞானம் எனப்படும் ஞானத்துச்சரியையிலே ஒருவாறு கூறப்பட்டதென்னலாம்.

## ஞானசாரியர் உபதேசவழிநிற்றல் (ஞானத்துக்கிரியை) :

குரு திருவருளால் உபதேசம் பெற்ற ஆன்மா, அதனாலாகிய சிறந்த சிவப்பேறடைதலே சிறப்பாகும். இதனை அடையாது போனால், பணம் நிறையக் கிடைத்தும், வயிற்றுக்கும் உண்ணாது புதைத்துக் கேட்டுக்கு ஆளாகும் உலோபத்தன்மைக்கு நிகராம். குரு திருவருளானது உபதேச வாயிலாக, ஞான தீக்கை முறையாக மாணாக்கனைச் சிவபோத நெறி காட்டிச் செலுத்துகின்றது. வழியைக்காட்டுவோன் காட்டிக்கொடுத்தாலும், அவ்வழியில் நடப்போன் நடந்து சென்றால்தான் குறிப்பிட்ட இடம் அடைய லாம். பாச அறிவு கொண்டு பதியை அறிய இய லாது. பசு அறிவு, துணைகொண்டறியும் குறைபாடு உள்ளதாதலால் அதுவும் பதியை அறியமாட்டாது. இதனால் முதல்வனை அவனது திருவடிஞானத் தாலேதான் அறியவேண்டும். இதனால், ஆன்மா, பாசக்கூட்டத்திலிருந்து நீங்கவேண்டும். அப்போது பதிஞானம் வெப்பத்தை நீக்குகின்ற நிழல்போல் வெளிப்படும். இந்த வெளிப்பாட்டினைச் சலியாமல் பற்றிக்கொண்டு நிற்கவேண்டும். இதுவே சிந்தித்தல் நிலை எனப்படும். குருவினிடம் கேட்டலால் ஞான மடைந்த உயிர், அதனைச் சிந்தித்தலால் உறைப்புக் கொள்ளல்வேண்டும். இதற்குப் பஞ்சாக்கர சிந்தனை துணைபுரிவதாகும். இதனால் உயிரைப்பற்றிய வாசனா மலம் நீங்கும். பிறப்பு, மயக்கத்தை உடையது. இம்

மயக்கத்துக்குக் காரணம் ஆணவமலம் உடைமை யாகும். இம்மலவேகம் தணியப்பெற வேண்டும். தணிவதனுல் அடையப்படும் பொருள் சிவமே ஆகும். மலத்தினைநீங்கின உயிருக்குச் சிவமே தாரக மாகும். இம்மலநீக்கத்துக்குச் சிவத்தினது திரு வருளே துணையாவது. அதாவது, சிவத்தினை அவனது அருளாலே ஆன்மா அடையவேண்டும். இவ்வளவும் முயலவேண்டுவது ஆன்மாவே ஆகும். இதனுல் பயனடைவதும் ஆன்மாவே. இந்தவிஷயங் களைக் குருவின் முதல் உபதேசம் எனப்படும் தூல பஞ்சாக்கரமான நமசிவய என்பது உணர்த்தும் திறத் ததாகும். இந்தமுறைமை உணரப்பட உணரப்பட ஆன்மாவிடமுள்ள விபரீதஞானமும், மயக்கமறைப் பும் விலகலுறும். இதுவே சிந்தித்தல் எனப்படும் சிவயோகப்பயனும். இந்தத் தூலமான உபதேசப் பகுதியே நாம் முந்திமேற்கொண்டு முயலவேண்டுவது ஆதலால்தான், தான்பெற்ற இம்முதல் உபதேச நெறியை நமக்கு அறிவிக்கும்பொருட்டு "நமச்சிவாய வாழ்க" எனக்கூறிக் காட்டலுற்ருர் நம் அடிகள். மற்றும் திருச்சதகத்தும், "போற்றியோ நமச்சிவாய புயங்கனே" எனத்தொடங்கும் பாடலிலும் இம் மறை மொழி புகலப்பட்டிருத்தல் காணலாம். அன்றியும், "நமச்சிவாய என்றுன்னடி பணியாப் பேயனுகிலும் பெருநெறி காட்டாய்" என்று அடிகளார் கூறியிருத் தல் கருதத்தக்கதாகும். இம்மறைமொழியைச் சிந்தித் திருத்தலே அல்லாமல், இதனைத் தமக்கு அருளிய குரு திருமேனியினையும், இவ்வுபதேசம் தமக்குக் கிடைக்கப்பெற்ற தலமான திருப்பெருந்துறையினை யும் எங்குச்செல்லினும் சிந்தித்தவண்ணமாகவே நம்

சுவாமிகள் பாடியருளியுள்ளார்கள். "இறக்கிலேன் உனைப்பிரிந்தினி திருக்க என்செய்கேன்" எனவும், "சிவன்கழலே சிந்திப்பேன்" எனவும், "நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்து அடியேன் பாலே புகுந்து பரிந்துருக்கும்" எனவும், "திருவார் பெருந்துறைச் செல்வன் ஆகிக் கருவார் சோதியிற் கரந்த கள்ளம்" எனவும், பின்னும், தாம் செல்லும் தலந்தோறும் பெருந்துறை மேயானையே காண்பதாகக் கொண்டு, திருக்கழுக்குன்றம், திருவெண்காடு முதலிய பல தலங்களிலும் குருந்தின்கீழ்க் குருநாதனையே தாம் தரிசித்து ஞானாசாரியர் நினைவேயன்றி வேறுநினைவின்றிய நிலையினராகி "இவ்வூனூர் உடல் புகுந்தான் உயிர்கலந்தான் உளம்பிரியான்" எனவும் "பெருந்துறையான் (என்) மனத்தான் கண்ணினகத்தான் மறுமாற்றத்திடையான்" எனவும் பலபடியாகக் கூறி நினைவெல்லாம் பெருந்துறையானடியிலும், பெருந்துறையானடிநினைவிலும் பொருந்தப் பெற்றுள்ள நிலையினைத் தாம் எய்தியதை விளம்பியருளியிருக்கின்றமை காணலாகும். இந்நிலையில் 'நான்' என்ற எண்ணமே இல்லையானது. பகல் இரவு அறியாநிலை எய்தியது எனவும் கூறிக்காட்டியிருக்கின்றனர் அடிகள். இந்நிலை ஆன்மசுத்தி நிலை எனப்படும்.

அடிகளார், அரன்ஞானங்கொண்டே அரனை எங்குமாகக் காணலானார். பாசப்பற்றும் அப்பற்றின் பற்றும் அறப்பெற்றார். அஞ்செழுத்தே அகங்கொண்டு வாசனாமலமும் நீங்கலுற்றார். இறைவன் மாணிக்கோலத்தனாகி அருள்புரிந்தமை தெய்விகப் புணர்வாம். இந்நிலைகள் திருக்கோவையாரில் பாங்கற்

கூட்டம், இடந்தலைப்பாடு, மதியுடம்படுதல் எனும களவிக்கொத்துப் பாடல்களால் தெரிவிக்கப்படுகின்றனவாம். தற்போதந்தான்கண்டகறல், அருட்குரு தரிசனத்தன்பு மிகுதிப்பாடு, குருவறிவித்த திருவருளதனைச் சிவத்துடன் கலந்து தெரிசனம் புரிதல் என்னும் பேரின்பக் களவிக்குரிய திருக்கோவையார்ப் பாடல்கள் இங்குப்பார்த்தல், சிந்தனையெல்லாம் சிவமேயாயின அடிகளார்நிலையினைத் தெரிவுறுத்தும். "பிரானடித்தாமரைக்கே பாங்கனையான்" "என்னறிவால்வந்தன்றிது ... வருந்தல் நெஞ்சே" "உன்னுரின் இன்னுமை அறிவிப்பன்" என்ற சொல்தொடர்களினமைப்புகள் மேற்கூறப்பட்ட சிந்தித்தல் நிலையியல்பினை விளக்குந்தகையவாதல் காணலாம்.

சிவம்செலுத்தும்வழி தான்செல்லுதலே உயிரின் சிவசிந்தனைத்திறனுகும். தன்னைக் கர்த்தாவாக உணராமையே இதன் இலக்கணமாகும் என்பர். இவ்விதமாகத் தூலபஞ்சாக்கர உபதேசப்பயனுன சிவசிந்தனு நிலை நமக்கு அடிகளால் அருளிச்செய்யப்பட்டுள்ளமை சிவபோதவாழ்வு நெறியின் ஒருநிலையாயிற்றென்க. இதுவரை தரப்பட்டுள்ளவைகொண்டு ஞானத்துக் கிரியை எனப்படுவதாகிய சிந்தித்தல் ஞானத்தின் நிலை ஒருவாறு ஆராயப்பட்டது எனலாம். இனி, ஞானத்தில்யோகம் எனப்பட்டநிலையில் நம்சுவாமிகள் ஒழுகியும் உபதேசித்தும் சென்றமைபற்றிக்கருதுவோமாக. செயல்மாண்டநிலை எனப்படுவது கிரியை ஓய்ந்த நிலைமையை உணர்த்துவதாகும். எனவே, திருப்பெருந்துறைவாழ்வு நம் சுவாமிகட்கு ஞானத்தின் முதல் இருகூறுகளாகிய சரியை, கிரியைகளை நிறைவுறுத்தியுதவியது என்னலாகும்.

**பாசநீக்கநிலை** (ஞானத்துயோகம்):

ஆன்மாக்கள் சதாசாரியருடைய உபதேசம் பெற்ற அளவிலே மெய்யுணர்வு எய்துகின்றன. அதாவது, உயிர்களின் உலகியலறிவானது பதிஞானமாக மாற்றம் பெறுகின்றதென்பதாம். அங்ஙனம், மாற்றம் பெற்ற, அந்த அரிதிற்பெற்ற பதிஞானமானது நிலைபெறுதற்பொருட்டே சிந்தித்தல் நிகழ்கின்றது. இதனால், சித்தம் முழுதும் சிவசிந்தனையே நிரம்புகின்றது. வேறுசிந்தனை உள்ளத்தே தோன்றுதலாம் இயல்பு நீங்குகின்றது. சித்தமெலாம் சிவமாகும் அடிப்படைத்தன்மை இதுவே ஆகும். இங்ஙனம், சித்தமுழுதும் சிவசிந்தனை நிறையும்போது, அதன் முன்னர், உள்ளத்தே ஒதுங்கியும் பதுங்கியும்கிடந்த ஏனைப்பற்றுக்கள் அறவே ஒழியப்பெறுகின்றன.

ஒரு பாத்திரத்தில் தண்ணீரை முற்றும் நிரப்பி விட்டால், அதன் முன்னர் அப்பாத்திரத்தில் கண்ணுக்கும் தெரியாதே நிறைந்திருந்த வாயுவானது முற்றும் வெளியேறிவிடுகின்றது. நிறைய நிரப்பாவிட்டால் நிரம்பிய அளவுபோக மீதி அளவுக்கு வாயு இருந்தேதீரும். வாயுவை முழுதும் அகற்றற்குப் பாத்திரம்முழுதும் திரவத்தால் நிரப்பப்படல் வேண்டும். இவ்வாறே, நம் உள்ளத்தை இடமாகக் கொண்டு நம்மை ஆட்டிவரும் பாசம்முழுதும் நீங்க வேண்டுமாயின், நம் உள்ளமெலாம் சிவசிந்தனையே நிரம்பவேண்டும். துஞ்சும்போதும் இங்ஙனமிருக்கும் நிலையே ஞானத்துக்கிரியை என முன்பே கூறப்பட்டது. தண்ணீர் நிரப்பப்படும்போதே வாயு வெளியேறுதல் நிகழ்வதுபோலவே, சித்தமெலாம் சிவமாம்

போது தன்னினைவு முற்றும் மறைதலால் பாசம் நீங்கிவிடுகிறது. தண்ணீரும் வாயுவும், பாத்திரத்துள் போரிடுதல் இல்லை. விளக்குப்புக இருள் மாய்வதுபோல ஒன்று புகலும் ஒன்று அகலுதலும் எளிதின் ஏற்படுகின்றது. இப்படித்தான் பாசநீக்கம் ஜீவர்களிடம் ஏற்படுகின்றது. கல்லெறிந்ததும் பாசி விலகுவதுபோலவே நீங்கத் தொடங்கிச் சந்திரன் வளரவளர இருள்முழுதும் விலகிவிடுவதுபோலப் பாசம் முற்றும் ஜீவனைவிட்டு நீங்கித் தெளிவு உண்டாகத் தலைப்படுகின்றது. இங்ஙனம் பாச முற்றும் ஒருவுதல்நிலையை நம் சுவாமிகள்,

> " வான்கெட்டு மாருதம்மாய்ந்து அழல்நீர் மண்கெடினும்
> தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
> ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என்உள்ளமும்
> நான்கெட்டவா " [போய்

எனக் கூறிக்காட்டுதலால் அறிதல் தகும். இதனால், பசுகரணம் சிவகரணமாதல் நிகழ்கின்றது. இது ஆடிப்பாவைபோல்வதொரு நிலையாம். இந்த நன்மை நிலையே ஞானத்துயோகநிலை ஆகும். நன்மைகள் பல; தீமைகளும் பல உள. ஒவ்வொரு நன்மை ஆக்கத்துக்கும், தீமை நீக்கத்துக்கும் ஓரொருவகையான மந்திரமொழி உரைப்பர் மாந்திரிகர். ஆனால் எல்லா நன்மையும் ஆக்கவல்லதும் எல்லாத்தீமையும் போக்க வல்லதுமான ஒரேமந்திரம் விதிப்படி எண்ணும் அஞ்செழுத்தாம். இது சிவத்தையே நாட்டிப் பாசத்தை ஓட்டி உதவும் திருமறை ஆகும். இதனைத்தான் சூக்கும ஐந்தெழுத்து என்பர். ஜீவனிடம் இருந்து ஆட்டிக்கொண்டிருந்த மறைப்பும் பாசமும் பின்னிட்டு ஓடுதலை இந்த மறைமொழி எழுத்துவரிசையினால்

தெரியலாம். இதுவே பாசம் ஓட்டும் படைக்கலம் எனப்படும். இந்த மறைமொழி சொல்லிக் காட்டுத லின்றி இருந்துகாட்டும் இயல்புடையதாகும். இது சொல்லிக் காட்டப்படுகையில் ஓதுமுறையாயிருந்து, இருந்துகாட்டும் நிலையில் நிற்குமுறையாக ஒழுகும். இத்தகைய மறைமொழியே நம் சுவாமிகட்குக் கோகழி ஆண்ட குருமணியால் உதவப்பட்டது. இது பழமை யான நான்மறையாலும் போற்றப்படுவது. இணை யற்ற பெருமை உடையது. இதனை உதவிய சிவத் துக்குச் சீவன், தன்னை நீத்து அடிமையாதலன்றி வேறு கைம்மாறு ஒன்றும் செய்யவொண்ணாது. "சேர்க்கும் துடிசிகரம்" என்னும் உண்மைவிளக்கப் பாடல் இங்குப் பார்த்தல் பயன்தரும். இப்பாசநிலை நீக்கமானது எல்லாம் அருள்மயமாகக் காட்சிதரும் தன்மையதாகும். "பாசத்தில் இட்டது அருள்" என்னும் திருமந்திரப்பாடல் இங்கு ஒப்புக்காணல் தகும்.

ஞானத்து யோகநிலை கைகூடுகையில் இதுகாறும் சீவன் முன்னாகச் சிவம் பின்னாகிநின்ற நிலை நீங்கி இனிச் சிவம் முன்னாகச் சீவன் பின்னும் நிலை நிலைக்கப்பெறுகின்றது. அப்போதுதான் ஏகன் ஆகி இறைபணி நிற்கும் நிலைமை ஆன்மாவை அடையும். இந்த நிலையிலேதான் மலம் மாயை தன்னோடு வல்வினையும் இன்றாம். இதுவே கேட்டல், சிந்தித்தல் களின் மேற்பட்டதான தெளிதல் நிலை எனப்படுவது. ஆவி ஆண்டானுக்கு அடிமை என்பதே தெளிவு எனப்படும். இது, அகப்பொருளியல்பில் அருஞ் சுரமும் நன்னுதலாட்குப் பதிபோன்றிருக்கும் நிலை நிகர்க்கும். இதில் "சென்று சென்று அணுவாய்த்

தேய்ந்து தேய்ந்து ஒன்றும்" நிலை நிகழலுறுகின்றது. ஏகனும்நிலை என இது பேசப்படும். இந்த நிலையில் உதவுறும் ஐந்தெழுத்தே ஞானவாள் என்றுவமித்துக் கூறப்படுகின்றது. இஃதெய்திய சீவன்தோற்றம், "நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்" ஆகும். இப்படிப்பட்ட சிறந்தநிலையில் நம் அடிகளாரை நிலைபெற அருளியது திருவிடைமருதூரை அகப்படுத்து நிற்கும் திருவாவடுதுறைப்பதி. இங்கே அரசம்பலத்து எழுந்தருளியபெருமான், தானே, நம் சுவாமிகளைத் தம்பால் மேவுவித்துச் சிவாயநம என்னும் சூக்கும ஐந்தெழுத்தருள்நிலையை இருந்து காட்டி ஏற்பித்தானவன். இந்த நிலையைத் தெளியப் பெற்ற நம் மணிவாசகப்பிரான், மாசில்மணிப்பிரானை வியக்கும் நிலையில் "நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்" என்றருளிப் போதலுற்றார் என்னலாம். பெருந்துறையரசே ஈண்டும் தோன்றிப் பேச்சிறந்த மணிவார்த்தையாகிய இதனை நம் சுவாமிகட்கு அருளிச்செய்தாராவர். "நம் இடர்கள் போயகல எண்ணி எழு கோகழிக்கு அரசை" என்ற இடம் இங்கு நோக்கற்குரியதாம். இதனால் கரணங்களெல்லாம் பேரின்பமயமாம் நிலை எய்திடலுற்றனர் நம் சுவாமிகள். இதுவே, தம் வாழ்வில் எய்தப்பெற்ற பெருநிலை யடிப்படை ஆதலால், "கடையேனைத் தொண்டாகக் கொண்டருளும் கோகழி எங்கோமாற்கு...உண்டோ கைம்மாறு" என்று கூறி வியப்புறலுற்றனர் அடிகளார் என்னலாம். இதுமுதல் நம் சுவாமிகள் அரனுடன் ஒன்றாகிநின்று, யாவும் அரன்பணியே எனத் தெளிந்து சிவப்பேற்றுநிலைக்கு ஏற்றவராயினர் என்க. சிவஞானபோதத்துப் பத்தாம்

சூத்திரம் பகரும் பாசக்ஷயநிலைம் எல்லையினை நம் மணிவாசகப்பெருமான் கடந்தருளிய தன்மை புலப்படலாகின்றது என்னலாம். இது அஞ்ஞானகன்மம் பிரவேசியாநிலை ஆகும். பொருட்படக்கருதின், திருப் பெருந்துறைப்பிரான் வேறு; திருஆவடுதுறைப் பிரான் வேறு அல்லர். சத்தியின் திறத்தினை வியந் துள்ள நம் சுவாமிகள், அச்சத்திக்கும் கோவியல் கழித்தாண்ட இப்பதியின் பெரும்பதியின் எண்ணம் இயல்பாக எழுந்திருத்தல் சாத்தியமுள்ளதேயாகும். அடிகளார்காலத்துத் திருவாவடுதுறை ஞானபூமி பெரும்பரப்பினை உடைத்தாயிருந்திருத்தலும் கூடும். பற்பலசித்தர்கள் ஈங்கு ஞானத்துயோகியராய்த் திகழ் தலையறிந்து ஈங்குற்று இத்தெளிவு மறையறியப் பெற்றாரென்றல் இழுக்கன்றாம். அடிகளார், இத் தெளிவுபெற்றதற்கான கைம்மாறு ஏதும் தம்மால் புரிதற்கு இயலாதெனை விளம்பியுள்ளாராயினும், தம் நூலின் முகப்பிலே "நமச்சிவாயவாழ்க" எனக் கூறி யருளியமைக்கிணங்க இங்கு நம் பரமாசாரியப் பெருந் தகையான பஞ்சாக்கரதேசிகர் ஞானபரம்பரை நிலவி வருதல் கண்கூடாகும். ஆதலின், நாமும் ஈங்கு "நமச்சிவாயவாழ்க" என்றேகூறித் தெளிவுபெறுவோமாக! இதுகாறும் கூறியவைகொண்டு நாம், நம் சுவாமிகளார் மேற்கொண்டருளிய சிவபோதவாழ்வு நெறியிலே பாசநீக்கப்பயன் எல்லையளவும் பார்த்தோம். இனி, அடிகளார் சிவப்பேறெய்திய தகைமை பற்றி ஒருசிறிது பேசுவோம். இங்கு ஞானத்துயோக நிலை பேசப்பட்டதோடு அகப்பொருட் கோவையுள் "அருளுயிர்க்கருமை அறிய உணர்த்தலும், ஆனந் தத்திடை அழுத்தித் திரோதை, பரைவழியாகப்

பண்புணர்த்தியது" எனவும், "அருள்சிவம் பெறுபதம் இது என உரைத்தது" எனவும், "சிவனது கருணை தெரிய உரைத்தல்" எனவும், "திவ்விய இன்பங்கூடுங் குறி குலவி உணர்தல்" எனவும் "கைம்மாறு இன்பக் கலைத்துக்கு இலை என்றது" எனவும் கூறிக் காட்டியுள்ள கிளவிப் பாடல்களை ஒப்புநோக்கிப் பார்த்தல் இன்பம் பயக்கும் என்னலாம். இங்கு, "தத்ரைவம் ஸதி கர்த்தார மாத்மானம் கேவலம் து ய: – பச்யத்யக்ருத புத்தித் வான்ன ஸ பச்யதி துர்மதி:' என்னும் கீதையுரையும் கருதிப்பார்க்கலாகும்.

## சிவப்பேற்றுநிலை (ஞானத்து ஞானம்) :

இருள் நீங்கும்போதே வெளிச்சம் தோன்றுகின்றது. இவ்விரண்டும் ஒரேகால நிகழ்வுடையனவே. பேரின்பப்பேற்றுக்கு இன்றியமையாதது அரனை மறவாத அன்பு நிலையாம். இத்தகை நிலையுடையார்க்கு வருகிற விடயங்கள் யாவும் அரனே அனுபவிப்பன். இதுவே சிவபோதவாழ்க்கையின் முடிந்த இம்மைப்பேறு ஆகும். இந்த நிலையில் முதல்வன் சிற்சத்தியும் ஆன்மசிற்சத்தியும் நதியும் கடலும் புணர்வதுபோன்று விரவி நிற்கும். இத்தகை நிலை எய்தினோர் சிவமுதலே அன்றி வேறுமுதல் அறியாராவர். தன்செயலென ஏதும் கொள்ளார். இந்த நிலையினையே நம் சுவாமிகள் திருத்தில்லை எய்தியபின்னர் அடைந்து வாழலுற்றாராவர். "நாயிற்கடையாம் நாயேனை நயந்து நீயே ஆட்கொண்டாய் - மாயப்பிறவி உன்வசமே வைத்திட்டிருக்கும் அது அன்றி - ஆயக்கடவேன் நானோதான் என்னதோ இங்கு அதிகாரம் - காயத்திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய்

கண்ணுதலே" என்னும் இப்பாடல் அடிகளார் அடைந்த சிவப்பேற்று நிலையினை நன்குணர்த்தவல்ல தாகும். "மாயமெல்லாம் நீங்கி அரன்மலரடிக்கீழ் இருப்பன் மாறாத சிவானுபவம் மருவிக்கொண்டே" என்ற சித்தியாருரையும் இங்குக் கருதிப்பார்த்தல் நன்றாம். "உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" என்னும் திருக்கோவையார்ப் பாடலுரையும் இங்கு ஒப் பிடுதல் செய்யலாகும். "ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே என்னுடை அன்பே" என இப் பதத்தினை முடிந்தபேறாக உரைப்பர் நம் சுவாமிகள். இது சிவப்பேற்றின் அநுபவநிலையாதலால், நிற்கும் முறையாகக் கோகழியிலே உதவப்பெற்ற முத்தி ஐந்தெழுத்து முறையிலே அடிகளார் தில்லையம்பதி யிலே மேவலுற்றனர் என்னலாம். அதாவது சிவா காரத்திலே, தானென்பது ஒன்று தோன்றாதே அடங்கிக்கிடத்தலே முத்தி ஐந்தெழுத்தின் முழுப் பொருள் எனப்படும். "உடையாளுன்தன் நடுவிருக் கும்" என்ற பாடல் இப்பொருளுரைக்கும் பெற்றியது என்பர் பெரியர். "அமுமதுவேயன்றி மற்றென்செய் கேன்" எனவும், "இனித்தான் இரங்காயே" எனவும், "ஆள்வாரிலி மாடு ஆவேனோ" எனவும், "உயிர்க் கிரங்கி அருளாய்" எனவும், "புலன் ஐந்தின் வழி அடைத்து அமுதே ஊறி நின்று என் உள் எழும் பரஞ்சோதி" எனவும், "ஆக்கை ஆனந்தமாய்க் கசிந்து உருக......இன்னருள் தந்தாய்" எனவும், "எல்லா உயிர்கட்கும் உயிரே" எனவும்; "உன்னைக் குறுகினேற்கு இனி என்ன குறையே" என்றெல்லாம் நம் சுவாமிகள் கூறிக்காட்டும் அநுபோக நிலையினை நாம் இங்குச் சிந்திப்பது நம் வினையைச் சிந்திப்பது

ஆகும். இதுவே நம் சுவாமிகள் சிவஞானபோதத்துப் பதினோராம் சூத்திரமாகிய சிவப்பேற்றுநிலை எய்தி அருளிப் பாடலால் உணர்த்தி நம்மனோரைத் தெருட்டிய பண்பாகும். இதனை நிட்டைகூடல் என்னலாம். ஞானத்துஞானம் எனப்படும் ஞானியர் நிலை இதுவே.

இருபத்தெட்டு ஆகமங்களை அறிந்த பின்னர் அடையப்பெறும் அறிவு நிலைபோல, நம் சுவாமிகள் பொதுவாகத் தமது இருபத்தெட்டாம் ஆண்டெல்லைப் பின்னர் திருச்சிற்றம்பலப்பேரெல்லையிலே புறம்பே வாழ்தலுற்றுர் ஆவர். இனி, இவர்கள் சீவன்முத்தராக ஒரு நான்கு ஆண்டளவும் தில்லை எல்லையிலே இருந்தருளிப் பின்னர்த் தில்லைப் பெருவெளியிலே கலந்தருளிய பெருமையைப் பார்ப்போம். "உயிர் சிவமணம் பெற்று உண்மையின்பாகிப் பரை கடந்தின்பப் பண்பாய் நிற்றல்" எனப்படும் கோவையார்ப்பொருள் இங்குக் காண்டல் நன்றே.

## சீவன்முத்திப்பேறு :

சுவாமிகள், தில்லையம்பதியிலே சிவநிட்டையிலே இருக்கலுற்றனர். அவர்களது அறிவாதிய மூன்றும் அயரா அன்பு வழியொழுகின. மலங்கள் கெட்டன. சிவபத்தர்களோடு மருவியுறைதல் கூடியது. எல்லாம் சிவம் என்கிற நிலையில் தோய்ந்துறையலுற்றுர் அடிகள். உலகிலுள்ளாரும் இச்சன்மார்க்கநெறியில் படர்ந்து சிவப்பேறெய்தவேண்டும் என்பது சிவபெருமான் திருவுள்ளம். ஆதலால், சிவமறையவரால், திருவாசகத் திருக்கோவையார்த் தமிழ்மறைகள் திருவாதவூரர் வாக்கில் நின்று அருளிச் செய்யப்

பட்டன. சிவபோகம் இதனினும் வேறு எதுவுமில்லை. இங்கு நம் அடிகளார் அருளியுள்ள, "அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்"; "தேசர் நேசர் சூழ்ந் திருக்கும் திருவோலக்கம் சேவிக்க......இரங்காய்"; "அடியார் களிசிறப்பக் காட்சி கொடு"; "தெருளார் கூட்டங் காட்டாய்"; "சிரிப்பார் களிப்பார்...தலைவா என்பார் அவர்முன்னே இருப்பேனே"; "தேறலின் தெளிவே"; "நீ என் உடலிடங்கொண்டாய் இனி உன்னை என் இரக்கேனே"; "களித்தனன் உன்னைக் கண்டுகொண்டின்று"; "ஆனந்தமாக்கும் என் சோதி" என்றுள்ள பாடல்அடிகளையெல்லாம் நாம் இங்கே பயின்றனுபவித்தல் பயன்தரும். "ஆனந்த வெள்ளத் தழுந்துமோர் ஆருயிர்" என்னும் திருக் கோவையார்ப் பாடலும், இதன் பேரின்புப் பொரு ளாக "ஒன்றற் றிரண்டற் றுரைன்று மூலவா தொழியா தனை யுரைத்தது" என்று கூறியிருப்பதும் நாம் இங்கே ஒப்பிட்டு நோக்கல் தக்கதே. இப்படியாகப் பாவைபாடிய வாயால் கோவையும் பாடுவித்துத் திரு வாசகத்துக்கு வாச்சியமாம் பொருள், ஸ்ரீ மாணிக்க வாசகசுவாமிகளை ஒன்றுவித்துக் காட்சியளித்தது உலகுக்கு என்னலாம். இங்ஙனமாக, நம் சுவாமி களின் சிவபோதவாழ்க்கையின் பேரின்பப்பேற்று நிலை சிவஞானபோதத்தின் பன்னிரண்டாம் சூத்திரக் கூற்றுக்கு இணங்கும் தன்மையதாயிருத்தல் நாம் அறிந்து மகிழ்வுறுதற்குரியதாம்.

**முடிபுரை:**

சமயாசாரியர்கள் நால்வரில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் சன்மார்க்க நெறிக்குச் சான்றுளராவர்

என்பர் பெரியோர். அங்ஙனம் நம் சுவாமிகளார் வாழ்க்கை அமைந்து கிடத்தலை வேறு எவ்வகைத் துணைகொண்டும் ஆய்தல் அரிதாம். ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனுர் அருளிச்செய்துள்ள வேதாகம சாத்திரப் பிழிவு ஆகிய சிவஞானபோத சாத்திரக்கண் கொண்டே நாம் ஆராய்தல்கூடும். அதுவே தக்கதாகும். இச்சாத்திரம் ஞானத்துச் செய்தியினையே சிறப்பாக விரித்துரைப்பதாக உள்ளது. அதனில் உள்ள பொதுவும், உண்மையும் ஆகிய பகுப்பின் படியே நம் சுவாமிகளின் வாழ்வியல் தூலநிலையில் அமைந்துள்ளது. சிறப்பாக எட்டாம் சூத்திரக் கூற்றுக்கு நம் சுவாமிகள் வரலாறே சிறந்த எடுத்துக் காட்டாக மிளிர்கின்றது. இப்பால், பன்னிரண்டாம் சூத்திரமளவும் கூறிச் செல்லப்படும் இலக்கணங் கட்கு இயைய நம் சுவாமிகளின் வாழ்க்கை அமைவுற்றுத் திகழ்கின்றது. எனவே, ஸ்ரீ மணிவாசகப் பெருமான் சிவபோதவாழ்க்கை நம் சிவஞான போதத்திற்கு ஓர் இலக்கியம் எனத் திகழ்கின்றது என்றல் மிகையாகாது. சிவஞானபோத ஞானஇயல், யாவரும் பேரின்பப் பெருநிலை அடைதற்கு ஐந்தெழுத் தருமறையினை மூவகையாக எடுத்துக்காட்டி நடத்துகின்றது. அங்ஙனமே, நம் சுவாமிகளின் வைதிகநெறி வாழ்வும் திருவாதவூர், திருஉத்தர கோசமங்கை, திருப்பெருந்துறை, **திருவாவடுதுறை,** திருத்தில்லை என்னும் ஐந்து பெருந்துறைகளின் வழியே சென்றுள்ளமை புலனுகின்றது என்னலாம். ஒலிகேட்டு, கோசம் தவிர்த்து, பெரும் பெயர் உணர்ந்து, அப்பொருள் தெளிந்து, ஒளிமயமாகி ஒன்றுன நம் சுவாமிகளின் திவ்விய வாழ்வினை இத்தலமுறைகள் காட்டுகின்றனவாகும். சுவாமிகள் முறையே அரசியல் அநுபவம், ஞான இயலநுபவம், ஆனந்தாநுபவம் என்கிற ஒன்றின் ஒன்று உயர்வு

உடையதான மூவகை வாழ்வுகளில் ஒழுகிக்காட்டி நம்மனோர் மயக்கம்தெளியச் செய்துள்ளார் ஆவர்.

முடிபிலே நம் சுவாமிகள், தாம் அடைந்தபெரும் பேற்றின்பேறு வேறில்லை என யாவரும் தெளிதற் பொருட்டு அச்சோப்பதிகம் அருளிச்செய்துள்ளார். ஆனந்தமாலைப்பதிகத்திலே, ''அவலக்கடல் வீழ்ந்த'' என்ற சொற்றொடரையிட்டு நமக்குப் பஞ்சபாசங் களை நினைப்பூட்டுகின்றனர். ''சீலமின்றி, நோன் பின்றி'' என்ற பாடலால் சரியை முதலிய நான்கு சைவத் தவநெறிகளையும் நமக்குக் காட்டுகின்றார். ''கேடிலதாய்''; ''கெடுகின்றேன்''; ''கொடுமா நரகம்'' என்னும் சொற்றொடர்களை ஒருபாவினுட் பெய்து பதி, பசு, பாசம் எனப்படும் முப்பொருள் இயல்பினையும் நமக்கு அறிவுறுத்துள்ளார். ''தாயே உன்றன் தாளடைந்தேன்'' என்று உரைத்தலால் சித்துப் பொருள்கள் இரண்டின் தொடர்பினை உவமித் துள்ளார். அச்சோப்பதிகத் தொடக்கத்திலே இரு பொருள்களும் ஒன்றும் நிலையினைச் ''சிவமாக்கி'' என்று கூறித் தெருட்டியுள்ளார். முத்தியிலும் மும் முதல்கள் எங்ஙனம் அமைகின்றது என்ற சைவ சித்தாந்த நுட்பம் புலப்படுமாறு, ''மலம் அறுவித்து . . . . முதல்வன் . . . . நம்மையும் அருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவே'' என்று திருவாய் மலர்ந் துள்ளார். நாம் எவரும் இம்மை வாழ்வையே பெரிதென எண்ணி மயங்குகின்றோமெனக் கருதிப் போலும் அதனினும் சிறந்தது அம்மை வாழ்வு என இறுதியில் ''அம்மை எனக்கு அருளியவாறு'' எனக் கூறி உபதேசித்தருள்செய்கின்றாராவர். இவையெல் லாம் நாம் கருதுவோமாயின், அடிகளார் சுத்தாத்து வித முத்தி இயல்பினைக் காட்சிப் பிரமாணமாக உலகுக்குக் காட்டி, அதனிற் சிறந்தபேறு வேறில்லை

என்பதையும் அம்பலத்தில் நாட்டியருளற்கு எனத் திருவவதாரம் செய்தருளியவர் என நாம் எட்டுணையும் ஐயமும் பேதமுமின்றிக்கருதி உய்திபெறலாகும் என்பது துணிபாம். மற்றும், எல்லையில் நாதத்தினடியாக வடமொழி ஐம்பத்தொரு எழுத்துக்கள் தோன்றி வேதாகமங்களாக விரிந்து முப்பொருளையும் முத்தியுபாயத்தையும் கூறுவதேபோன்று, தில்லையில் நாதனின் அடியாகத் தமிழ் மொழியால் ஐம்பத்தொரு பதிகங்களாகத் தோன்றித் திருவாசகமாக விரிந்து முப்பொருளையும், முத்தியியலையும் எட்டாந்திருமுறை கூறுகின்றதென நாம் கொள்ளுதல் நலம். ஓதி உய்க உலகம்!

**திருவாதவூரர் திருவடி வாழ்க!**



## திருக்களிற்றுப்படியார்

" பாய்பரியோன் றந்தப் பரமானந் தப்பரனைத்
தூயதிரு வாய்மலரால் சொற்செய்து - மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளும் தேன் "

## பழமொழி

" திருவாசகத்துக்கு உருகாதார்
ஒருவாசகத்துக்கும் உருகார் "

## ஔவையார்

" தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர் "

---

